சென்னைப் பதிவு எண் கடுஂக. | தனி இதழ் விலை அணா ஒன்றரை | தந்தி விலாசம்:—"OOLIAN"

# ஊழியன்

சந்தா விபரம்.

| | |
|---|---|
| வருடச் சந்தா ... | ரு—0—0 |
| ஆறுமாதச் சந்தா ... | க—0—0 |
| வெளிநாடு வருடச் சந்தா | சு—0—0 |

செவ்வாய்தோறும் நிகழ்வது.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

விளம்பர விகிதம்.
அங்குலம் க-க்கு வாரம் க-க்கு ௦—அ—0
நீதிமன்ற விளம்பரம் அங். க க—0—0
ஒப்பந்த விளம்பரவிகிதத்திற்குக்காரியஸ்தருக்கு எழுதவும்.

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. —திருக்குறள்.

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல். —திருக்குறள்.

மலர் ஏ. காரைக்குடி. அட்சய-ஹூ புரட்டாதி-மீ க2-வ (உஅ—கூ—உகூ) இதழ் ட

## மலர் மணம்.

## திருட்டும் தித்திப்பும்.

(வ. ரா.)

நாங்கள் ஊருக்குப் புறப்பட்டோம். "ரயிலடி" வந்து சேர்ந்தோம். டிக்கெட்டு கொடுத்தார்கள்; வாங்கிக்கொண்டோம். ஆனல் "காசு" கொடுத்தோம். டிக்கெட்டின் "காதும்" கிள்ளப்பெற்றது. ரெயில்காரர்கள் அவ்வளவு விழித்துக்கொண்டிருக்கிறார்களாம்! கடமைவேலை என்று எங்களில் ஒருவர் சொன்னார். டிக்கெட்டு பரிசோதகர் எங்களைத் திரும்பிப் பார்த்தார். கூட்டத்தின் சந்தடியோ அதிகம்; எனவே, பரிசோதகர் எங்களைப் பார்த்துப் பயன் என்ன?

* * *

ரயில் வண்டி வந்து நிற்கிற இடத்துக்குச் சென்று, சற்றும் "மட்டு" மரியாதையில்லாமல், "போகிறவருகிற" பாதையிலே, இடத்தை அடைத்துக்கொண்டு, தாராளமாக உட்கார்ந்து கொண்டோம். "கதர் கட்டிக்கொண்டவர்களுக்குச் சற்றும் கௌரவம் கிடையாது" என்று ஒருவர் முணு முணுத்துக்கொண்டு போனார். எங்களில் ஒருவருக்குப் பாம்புச் செவி. இடியோலியைப்போல, நகைப்பை அவர் வெளியே விட்டார். கதர்ப்பேர்வழிகளுக்கு அடக்கமும் இல்லை யென்று எவரேனும் சொல்லுவார்களோ என்ற அச்சமும் எனக்கு உண்டாயிற்று.

* * *

எங்களுக்கு மூட்டைத் தொந்திரை இல்லை. ஆள் கனம் அவனவனோடு. நாவளைய உடை இடுப்பிலே. நாவளப்பட்டணம் மடியிலே. நாவளைய நடை காலிலும் மனதிலும். பிரயாணிகளுக்குப் பெருமை கொடுப்பதான மூட்டையில்லையே என்று நாங்கள் வருந்தவுமில்லை. அடிமை மூட்டைதான் இந்தியன் தலையில் சுமையாக நிற்கின்றதே!

* * *

ரயில்வண்டி மகாத்மா காந்திதான். அது வரும் வழியை எவ்வளவு காலம் ஜனங்கள் பார்த்துக் கண் பூத்துப்போகிறது! பக்கத்திலே ஒரு எஞ்சின் திருட்டு ஒலி செய்தது. பிரயாணிகள் திடுக்கிட்டு எழுந்தார்கள். பேரறிவாளியான ரெயில் போர்ட்டர், "என்ன அவசரமோ" என்று கண்டித்தான். கண்டித்ததைப் பார்த்து, சிலர் தலை குனிந்து கொண்டார்கள். மற்றும் சிலர் போர்ட்டருடைய "திமிரை"க்கண்டு பதறினார்கள்.

* * *

நாகரிகப் புகையை மூட்டை மூட்டையாக வெளியே கக்கிக்கொண்டு, ரயில்வண்டி வந்து சேர்ந்தது. மரணகாலத்தில் இவ்வாறுதானே, மனிதர்கள் மூச்சை வெளியே கக்குகின்றார்கள். புகைவண்டி நிலயத்தைக் கண்டதும், எஞ்சினுக்கு உயிர் அடங்கிப்போகுமல்லவா? "சுருட்டுக்குடிக்கிற வழக்கத்தை எஞ்சின் எப்பொழுது விடப்போகின்றதோ" என்று பாம்புச்செவியர் விகடம் பேசினார்.

"விகடம் வேண்டாம்; உட்காரும் இடத்தை முதலிலே சம்பாதித்துக் கொள்ளுவோம்" என்று எங்களில் வேறொருவர் சொன்னார். "நம்மை ஏற்றிக்கொள்ளாமல், வண்டி நகராது" என்று வெகு அமரிக்கையுடன் விடை பகர்ந்தார் பாம்புக்காதர்.

* * *

இடத்துக்கு நாங்கள் தொல்லைப்படவில்லை. பதினாறு பேர்கள் உட்காரும் அறைகளில் இரண்டு, காலியாக எங்கள் முன்னே சாந்தமாக வந்து நின்று, எங்களைக் கண்ணைக் காட்டி அழைத்தன. கண்ணோடு கண் நோக்கின், முடிவுதான் உங்களுக்குத் தெரியும். அறைக்குள் நாங்கள் நுழைந்தோம். எங்களுடன் வேறு இருவரும் நுழைந்தார்கள். ஒருவருக்குக் காதிலே வைரக்கடுக்கன், விரலிலே பச்சைக்கல் மோதிரம், கையில் வெள்ளிக் குமிழ்வைத்த பிரம்பு, மேலே விலையுயர்ந்த "அல்பாக்கா" சட்டை, அதற்கு மேலே விலை பெற்ற அங்கவஸ்திரம், இடுப்பிலே கூ000 கிளாஸ்கோ; நாகரிகமான தோல் பை ஒன்று கொண்டுவந்திருந்தார். இவர் விபூதி அணிந்திருந்தார். வந்த மற்றொருவர் பட்டை நாமத்துடன் உள்ளே நுழைந்தார்.

* * *

பக்கத்து அறை காலி. சந்தடியும் அதிகமாயில்லை. "அந்த அறை யாருக்குப் போட்டிருக்கிறதோ" என்று நாமக்காரர் தத்துவம் திருவாய் மலர்ந்தருளினார். "இதிலேகூட விதியா" என்றார் பாம்புச் செவித்தோழர். "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்று சுற்று முற்றும் பார்த்துக்கொண்டு நாமதாரி உளறினார்.

* * *

இதற்குள் சிறிய கூட்டமொன்று பக்கத்து அறைக்கு வந்து சேர்ந்தது. தம்பூர், மிருதங்கம் முதலிய இசைக்கருவிகளைத் தூக்கிக் கொண்டு, மஸ்லின் ஜிப்பா அணிந்திருந்த ஒருவன், வண்டியிலே ஏறினான். அவன் பின்னே சிறு கூட்டம்.

* * *

கூட்டம் கச்சேரிக்கு—நீதிஸ்தலத்துக்கல்ல—சங்கீதக்கச்சேரிக்குப் போய்த் திரும்பிவருகிற கூட்டம் என்று சொல்லவும் வேண்டுமா? மஸ்லின் ஜிப்பா ஆள் நீங்கலாக, கூட்டத்தில் இருந்தவர்களின் தொகை நான்கு. அவர்களில் ஒருவர் ஆண்பிள்ளை. மற்றவர்கள்? யோசித்துத் தெரிந்துகொள்ளுங்கள். மூன்றுபேர்களிலும், ஒருவர் வயது சென்றவர். மற்றைய இருவரும் வயது வந்து, சில ஆண்டுகளேயானவர்கள். இளமாதர்கள் இருவரில், ஒருவள் எலுமிச்சம்பழம்? மற்றவள் "கசப்பு" நார்த்தை. கிழவிக்குக் கன்னம் சுருங்கித் தொங்கத் துவக்கிவிட்டது.

* * *

நார்த்தையும் எலுமிச்சையும் எவ்வாறு இருக்கிறார்கள்? காதிலே கல், மூக்கிலே கல், விரல்களிலே கல்—எல்லாம் வைரக்கல். இவர்கள் உறவை நாடுபவர்களின் தலையில் பாறைக்கல் என்று சொல்லவும் வேண்டுமா? கைகளிலே பம்பாய், குஜராத்தி, கல்கத்தா, சென்னை— இன்னும் பெயர் தெரியாத ஊர் வளையல்கள். கோணல் வளையல், நேர் வளையல், சக்கர வளையல்—விதம் விதமானவைகள். மார்பிலே எத்தனை நகைகள்! கம்பன் வருணிக்கலாம்; அல்லது பாரதியார் வருணிக்கக் கூடும். இவ்வளவோடு ஒரே இடத்தில் தரிக்காத பார்வை.

* * *

இவர்கள் யாவரும் தங்கள் இடங்களில் அமர்ந்துகொண்டவுடன், அந்த விபூதி மனிதன் தன் தொண்டையின் சிக்கலை அறுத்தெறிய, சிறிது இருமினார். நாமதாரி அடுத்த அறையைப் பார்த்தவண்ணமாயிருந்தார். தோழர் பாம்புச்செவியர் எனது தொடையில் தாளம் போட்டுக்கொண்டு, பாடத்துவக்கிவிட்டார். இன்னொரு தோழர், இப்படி அப்படிப் பார்ப்பதும், பார்த்தபின் தலைகுனிந்து, கண்களைக் கீழே போட்டுக்கொண்டுமிருந்தார், கிழவியோ, அணி வகுத்து நிற்கும் சிப்பாய்களுக்குக் கட்டளையிடுவதுபோலப் பார்த்துக் கொண்டிருந்தாள். கச்சேரிக் கூட்டத்தார் யாவரென்று சொல்லத் தேவையில்லை என்று எண்ணுகின்றேன்.

* * *

தாசிக்கிழவி சொல்லுகிறாள்:—"நடேசா! என் பூசைப்பெட்டி யெங்கே? மறந்துவிட்டாயோ? அது உனக்குத் தேவைப்போல, உனக்குக் கடவுள் என்ற எண்ணமிருந்ததில்லலவோ?"

* * *

இவ்வாறு பேசிய கிழவி, கடவுள் என்ற சொல்லைச் சற்று அழுத்தமாகச் சொல்லி, எங்கள் பக்கமாகத் திரும்பிப்பார்த்தாள். "தாசிக்குக் கடவுள் கூடவா" என்று பாம்புக்காதர் முணு முணுத்தார்.

* * *

"நீங்கள் எல்லோரும் மகாத்மா காந்தி வழிபோலிருக்கிறது" என்று எங்களைப் பார்த்து, அவள் உபசாரக்கேள்வி கேட்டாள். "எங்கள் வீட்டிலும் ராட்டை இருக்கிறது. அதை அரை நாழிகையேனும் சுற்றாமல், பங்கசாட்சி (எலுமிச்சையின் பெயர்) போஜனம் சாப்பிடுவதில்லை. என்னவோ அதை அவள் நியமமாக வைத்துக்கொண்டிருக்கிறாள்" என்று வெற்றிக்குரலுடன் கிழவி மீண்டும் பேசினாள்.

* * *

பாம்புச் செவியர் அழகு வாய்ந்தவர்; ஆனால், மன உறுதியற்றவர். ஸத்தியாக்கிரகி கூட்டத்தில் அவர் சத்தியாக்கிரகியாக விருப்பார். மற்றவர்களின் கூட்டத்தில், அவர்களைப் போல. "தேசத்தோடு ஒத்துவாழ்" என்று அவர் அடிக்கடி சொல்லுவார். சத்தியாக்கிரகி தாசியைக் கண்டதும், நண்பருக்கு ஆனந்த வெள்ளப்பெருக்குண்டாயிற்று. அவருக்கு ஆனந்தம் பொங்கப் பொங்க, என் தொடை போய்விட்டது. அவ்வளவு பக்குவமான தாளம்!

* * *

"தங்கள் தொழிலை விட்டுவிடும்படி எத்தனை தாசிகளை மகாத்மா தூண்டிவிட்டார்" என்றார் நாமதாரி. குமிழ்த்தடி ஆள், தனது சட்டையை கணுக்கையினின்றும் ஒதுக்கி, ஒதுக்கி, இமைப்பொழுதுக்கொருதரம், மணி பார்த்துக்கொண்டிருந்தார்.

* * *

"காந்தி மகாத்மா. அவரால் எதைத்தான் செய்ய முடியாது" என்று கிழவி வாழ்த்துக் கூறினாள். "அவ்வாறானால், உங்களைச் சேர்ந்தவர்கள் தங்கள் தாசித்தொழிலை விட்டுவிடலாமே" என்று கடிந்து கூறுவதைப்போல பாவனை மட்டும் காட்டி, "பாம்பர்" கேட்டார். "பரம்பரைத் தொழில், அதை எப்படி விடுகிறது" என்றாள் கிழவி. நார்த்தையும் எலுமிச்சையும் பாம்புச் செவியரை "கோவல"ப் பார்வை பார்த்தார்கள். தோழர் சமாதி ஏறிவிட்டார். எதிர்ப்பிலே ஒன்று தோலைந்தது என்று எண்ணிக்கொண்டார்கள் கிழவியும் பச்சைக்கல் மோதிரத்தானும்.

* * *

காந்தி தீண்டாமையை ஒழிக்கச் சொன்ன 'மதியீன'த்தைப்பற்றிநாமதாரிபிரசங்க மழை பொழிய ஆரம்பித்தார். கொடுமை கொண்ட சொற்களை வெளியே கக்கினார். ஒவ்வொரு வாக்கியம் முடிந்ததும், ஆதரவுக்காக "கச்சே

மகாத்மா காந்தி "இளமை இந்தியா"வில் எழுதியது.

ஒரு நிருபர் எழுதுகிறார்:—

"இளமை இந்தியா"வில் தாங்கள் பிரஜா உற்பத்தியை அடக்கும் விஷயத்தைப்பற்றி எழுதியிருக்கும் கட்டுரைகளில் நான் மிகுதியும் சிரத்தை கொண்டேன். "மனோ தத்துவமும் நெறியும்" என்று தி. ஜே. ஏ. ஹாட்பீல்டு அவர்கள் எழுதியிருக்கும் நூலைத் தாங்கள் படித்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். அந்த நூலில் காணப்படும் இந்தப் பகுதியை தங்கள் பார்வைக்குக் கொண்டுவர விரும்புகின்றேன். [நூலில் எழுதப்பட்டிருப்பதாவது]:—

"நமது நன்நெறி உணர்ச்சிக்கு மாறாக காமம் வெளித்தோன்றுமாகில் அதை விலங்குத்தன்மை என்று பழி கூறுகின்றோம். காதலுக்கு ஏற்ப காமம் போக்குக்கொள்ளுமாகில், அதையே "சேர்க்கை இன்பம்" என்று வருணிக்கின்றோம். சேர்க்கை உணர்ச்சியின் இத்தகைய போக்குகள், ஸ்திரீ புருஷனுடைய காதலை அழிப்பதில்லை; ஆனால் காதலை அழுத்தமாக்கிவிடுகின்றன. ஆனால் கட்டுக்கடங்காமல் காம உணர்ச்சிக்குப் போக்குக் காண்பித்தாலும், சேர்க்கை உணர்ச்சி விலங்குத்தன்மை என்று தவறாகக்கொண்டு, அதை அடக்கும்பொருட்டு, சேர்க்கையை அறவே ஒழிக்க முயலுவதாலும், மனிதனுடைய காதல் மெலிந்துபோய், அவனுக்கு (விரைவில்) கோபம் உண்டாகின்றது."

ஹாட்பீல்டு அவர்களின் கருத்து என்ன? ஆண் பெண் சேர்க்கையில் ஒரு புனிதத் தன்மை இருக்கிறது. இந்தச் சேர்க்கையினால் குழந்தைகள் பிறக்கின்றன; தவிர, இதனால் ஆண் பெண்ணினுடைய காதல் வளர்க்கப் பெறுகின்றது. அவருடைய இந்த முடிவு சரியானால்—சரியென்றே எனக்குத் தோன்றுகின்றது—அவர் ஒரு கீர்த்திபெற்ற மனோதத்துவ சாஸ்திரி என்ற காரணத்தைத் தவிர, இல்லற வாழ்க்கையில் புணர்ச்சிஉணர்ச்சியைத் தடுக்க முயன்ற பல "கேசு" களில், இல்வாழ்வு சீர்குலைந்து போயிருப்பது எனக்குத் தெரியும். எனவே, குழந்தை பிறக்கவேண்டும் என்ற ஒரு நோக்கத்தைக் கொண்டுமட்டும் தான், புணர்ச்சியை ஆதரித்துச் சமாதானம் கூறலாம் என்று தாங்கள் எவ்வாறு சொல்லக்கூடும் என்று வியப்படைகின்றேன். பின் காணும் சங்கதியைக் கவனித்துப் பாருங்கள்.

ஒரு மாதும் இளைஞனும் காதல் கொண்டு, ஒருவரை யொருவர் நேசிக்கின்றார்கள். அவர்கள் அவ்வாறு செய்

---

நிக்" கூட்டத்தையும் கைக்கடியார நண்பரையும் நோக்கியவண்ணமாயிருந்தார். "அவனவன் இருக்கவேண்டிய நிலையில் அவனவன் இருக்கவேண்டும். கதர், ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை, தீண்டாமை சங்கதிகளில் நல்ல காந்திக்கு—உத்தமமான காந்திக்கு பித்துப் பிடித்திருக்கிறது" என்றார் தமிழ்த்தடி நண்பர். மேற்கூறியவைகளை நீக்கிவிட்டால், காந்தியின் பெருமை எங்கே இருக்கிறது என்று எனக்கு விளங்கவில்லை, "தடி"யருக்கு விளங்கவில்லை என்பது தெளிவு.

* * *

"நீங்கள் அறிவாளிகள். நாட்டைக்காக்க ஒரு சேவை வேண்டாமா? நாட்டைக் காக்கும் நிமித்தம் சேவை தனது உயிரைத் துறக்கத் தயாராயிருக்கிறது. தாசிகளும் நாட்டைக் காக்கும் சேவையைப்போல. எங்கள் உடலைப் பறிகொடுத்துவிட்டு, மானத்தையும் இழந்து, ஆண்மக்களின் துரோகம், நோய் முதலியவற்றையும் ஏற்றுக்கொண்டு, ஸ்திரீகளின் மானத்தை நாங்கள் காப்பாற்றுகின்றோம்" என்றாள் கிழவி. "டலே" என்று துள்ளிவிழுந்தார் "தடி"யர். இதற்குள் வண்டி நின்றுவிட்டது. சில தீண்டாதார்கள் உள்ளே நுழைய வந்தார்கள். உடனே பட்டை நாமமும், சட்டு விபூதியும், மினுக்கு தாசிகளும் ஒரு துறையில் கூடிக்கொண்டார்கள்,

* * *

ஏழை சத்தியாக்கிரகிகளும், குழந்தையைக் கட்டியணைத்து, உயர்ப்பாலூட்டும் பேதை பஞ்சம சகோதரியும், நாள் முழுதும் "நாணயமாக" உழைத்தும், பொறுமையும் பதவியையும் "தீண்டக்கூடாத" பஞ்சம சகோதரர்களும் கூடிக் கலந்துகொண்டார்கள். மணியும் அடித்தது. ரயிலும் புறப்பட்டது. இடியும் விழவில்லை. பிரளயமும் தோன்றவில்லை. காந்திக்கு ஜே!

---

# மன நிலைமையின் வேகம்.

யவேண்டுவது அழகாகும், கடவுளின் கட்டளையாகும். ஆனால், குழந்தையைப் போஷித்துப் படிக்க வைக்க, அவர்களிடம் போதிய பொருள் இல்லை. இந்தச் சங்கதிகளுக்குப் பொருளில்லாத நிலைமையில், குழந்தையைப் பெறுவது பாவம் என்று தாங்களும் ஒப்புக்கொள்ளுவீர்கள் என்று எண்ணுகின்றேன். அல்லது குழந்தையைப் பெறுவது பெண்ணின் உடல் நலத்துக்குக் கேடு உண்டாக்கும்; அல்லது அதிகமான குழந்தைகளை அவள் பெற்றுவிட்டாள் என்ற சமாதானத்தையாவது கூறுங்கள். தங்கள் கருத்துப்படி அவர்களுக்கு இரண்டு வழிகள் உண்டு. அவர்கள் மணந்துகொண்டு, தனி வாழ்வைக்கொண்டு, கலக்காமல் இருக்கவேண்டும். அந்த நிலைமையில்—ஹாட்பீல்டு அவர்கள் சொல்லுவது சரியாயின்—அவர்களுடைய காதல் பாழாகிப் போய்விடும்; ஏனெனின், புணர்ச்சி உணர்ச்சியை அடக்குவதனால் கோபம் உண்டாகும். (அதன் விளைவு காதலின் பாழ்). அவர்கள் மணந்துகொள்ளாமலிருக்கவேண்டும்; அப்பொழுதும் அவர்களுடைய காதல் வீணாகிப் போய்விடும்; ஏனெனின், இயற்கை மனிதக்கட்டுப்பாடுகளை இலட்சியம் செய்வதில்லை. (திருட்டுத்தனமாக, மணமில்லாமல் புணர்ச்சி ஏற்படும் என்பது நிருபரின் கருத்து). அவர்கள் ஒருவரை ஒருவர் பிரிந்து வாழலாம். பிரிவு நிலையிலும், அவர்களுடைய மனம் ஊக்கத்துடன் இருக்கும்; எனவே மனச்சிக்கல்கள் உண்டாகும். எத்தனை குழந்தைகளை வேண்டுமானாலும் பெறலாம் என்ற நோக்குடன், ஜனசமூக நிலையை பாற்றிவிட்டாலும், ஜனத்தொகைப்பெருக்கு என்ற ஆபத்துத் தோன்றுகின்றது; ஒவ்வொரு ஸ்திரீக்கும் அளவுக்கு மீறிய குழந்தைகளைப் பெறவேண்டிய ஆபத்து நிலை உண்டாகின்றது. ஏனெனின், ஒரு மனிதன் மன உறுதி கொண்டு தன்னை அடக்கிக்கொள்ளலாம்; என்றாலும் வருஷத்துக்கு ஒரு குழந்தையைப் பெறக்கூடும். கர்ப்பையோ அல்லது பிரஜா உற்பத்தியை அடக்குவதையோ தாங்கள் ஆதரிக்க வேண்டும். ஏனெனில், ஏதேனும் ஒரு சமயம் புணர்ச்சி நேர்ந்தாலும்—இவ்வாறு ஆங்கிலப் பாதிரிமார்கள் சம்பந்தமாகச் சில சமயங்களில் நிகழ்ந்திருக்கிறது—கடவுள் கொடுத்தார் என்று கணவன் மகிழ்வுடன் கூறும் குழந்தைகளை வருஷத்துக்கு ஒன்றாகப் பெற்று, தாய் இறந்துபோகின்றாள்.

தாங்கள் கூறும் "தன்னடக்கம்" பிரஜா உற்பத்தியை அடக்கும் சாதனங்களை (கருவிகளை)ப் போல இயற்கையின் தொழிலில் குறுக்கிடுவதாகும். தங்கள் யோசனை அதிகமாக இயற்கைக்கு விரோதம் என்றேசொல்லவேண்டும். பிரஜா உற்பத்தியைஅடக்கும் கருவிகளைக்கொண்டு, மனிதர்கள் காமத்தில் உழலலாம்—ஆனால் அவர்கள் வேண்டுமென்றே அவ்வாறு செய்யவில்லை—அவர்களுடைய பாபமுறையினால், அவர்களுக்குக் குழந்தைகள் பிறக்காவிடின், நஷ்டமடைபவர்கள் அவர்கள் தான்; வேறு எவருமில்லை. சுரங்க வேலை நிறுத்தத்தில், சுரங்கத் தொழிலாளர்களின் தொகை மிதமிஞ்சியிருப்பதனாலேயே, சுரங்க முதலாளிகள் இந்தப் போராட்டத்தில் வெற்றி பெறப்போகின்றார்கள் என்பதுதங்கள் ஞாபகத்தில் இருக்கட்டும். அதிகமாகக் குழந்தைகளைப் பெறுபவர்கள், தாங்கள் பெறும் திக்கற்ற குழந்தைகளுக்குத் தண்டனை விதிப்பதுமல்லாமல், மனித குலத்தையே தண்டிக்கின்றார்கள்.

மனோ நிலைகளையும் அவைகளின் வேகத்தையும் குறிக்கும் ஒரு படிப்பினையாகும் இந்தக் கடிதம். கயிற்றைப் பாம்பென்று மனம் கொள்ளுகின்றது. அந்த மன நிலையை அடைந்த மனிதன் உடனே திகிலடைகின்றான்; முகம் வெளுத்து, ஓட்டம் எடுக்கின்றான். தோற்றத்தில் எழுந்திருக்கும் பாம்பை அடிக்கக் கோலை எடுத்துக் கொள்ளுகிறான். வேறொருவன் தனது சகோதரியை மனைவி என்று தவறிப்போய் எண்ணிவிடுகிறான். உடனே அவனுடைய உள்ளத்தில் காம உணர்ச்சி எழுகின்றது. சகோதரி என்று கண்டுகொண்டவுடனே, அவனது காமம் பறந்தோடிவிடுகின்றது. நிருபர் கூறும் சங்கதியும் இவ்வாறுதான்.

காம உணர்ச்சி விலங்குத்தன்மை கொண்டது என்ற தவறான எண்ணங்கொண்டு, புணர்ச்சி ஒழிக்கப்பட்டு வருமாயின், அது காதல் மெலிவையும் கோபத்தையும் உண்டாக்கலாம். ஆனால் காதலின் பற்றை உறுதிப்படுத்தவும், அதைப் புனிதமாக்கவும், பெரிய காரியத்துக்காக ஜீவ சக்தியைச் சேமித்து வைக்கவும் எண்ணங்கொண்டு, புணர்ச்சியை ஒழித்தால், நேசப்பற்றை அது அழிப்பதற்குப் பதிலாக, அதை உறுதிப்படுத்தும்; அது மன அமைதியை உண்டாக்கும். விலங்குத் தன்மையைத் தாங்கிய காம உணர்ச்சியின் மூலமாய்க் கட்டப்பெறும் காதல், எவ்வளவு உயர்ந்த நோக்கத்துடன் பார்த்தாலும், சுயநல சங்கதியாகும். சிறு சனத்தையும் தாங்கமுடியாமல் அது உடைந்துபோகும். புணர்ச்சி விலங்கினம் சம்பந்தப்பட்ட வரையிலும் புனிதமாகக் கொள்ளப்பெறுவிடின், மனித வருக்கத்தைப் பற்றிய மட்டும், அதை ஏன் உயர்வாகவும் புனிதம் கொண்டதாகவும் கருதவேண்டும்? உயிர்க்குலம் வளர்வதற்குத் தேவையான பிரஜா உற்பத்தியின் தூண்டுதலில்—வேறு வழியில்லாமல், திக்கற்ற தன்மையால்—காம அனைவரும் மாட்டிக்கொண்டிருக்கிறோம் என்ற உண்மையைக் கொண்டு, புணர்ச்சியை நாம் ஏன் நோக்கலாகாது? குறிப்பிட்ட எல்லைக்குள் மனிதனுக்கு சங்கற்ப சக்தி (மனத்திடம்) இருக்கப் பெறுகின்றது. உயிர்க்குலத்தின் நன்மைக்காக, விலங்கினத்தைக் காட்டிலும் உயர்ந்ததொரு கடமையைச் செய்ய, மனிதன், தனது ஜீவ சக்தியை அடக்க முயலுகின்றான். காதலின் வளர்ச்சிக்குப் புணர்ச்சி தேவை என்று கருதுவது வழக்கத்தின் கொடுமையினாலே. பிரஜா உற்பத்திக்கு மட்டுமே புணர்ச்சி வேண்டுவதாகும். புணர்ச்சியினால் காதல் வளர்வதில்லை என்பதை, எவ்வளவோ நாம் பார்த்திருக்கிறோம். காதலை நிலைப்பதற்கும் செழுமைப்படுத்துவதற்கும் புணர்ச்சி தேவையில்லை என்பதையும் நாம் கண்டிருக்கிறோம். புணர்ச்சி ஒழிவதனால் காதல் பற்று வளர்ந்திருப்பதற்கு பல உதாரணங்கள் காண்பிக்கக்கூடும். பரஸ்பரம் நன்னெறி உயர்வுக்காக, புணர்ச்சி ஒழிவை விருப்புடன், மனதறிந்து கொள்ளவேண்டும்.

மனித சமூகம் என்பது சலிப்பில்லாத வளர்ச்சியாகும்; ஆன்ம விரிவில் மலர்ச்சி பெற்று வருகின்றது. இது உண்மையானால், உடலின் தேவைகளைக் குறைத்து அடக்கக்கூடிய சாதனங்களை நாடவேண்டும். கலியாணத்தை நடையொழுங்குக்கான சிட்சையாகக் கருதவேண்டும்; தாங்கள் விருப்பங்கொண்டு, அதற்குத் தயாராயிருப்பின், பிரஜா உற்பத்திக்கு மட்டும் புணர்ச்சியைக் கணவனும் மனைவியும் ஒதுக்கிக்கொள்ளவேண்டும். எனவே பிரஜா உற்பத்தி உணர்ச்சியை எதிர்க்காத புணர்ச்சி நிருபர் கூறும் இரண்டு இடங்களிலும் இருக்கப் பெறாது.

பிரஜா உற்பத்தி நேரினும் நேராவிடினும் புணர்ச்சி தேவை என்ற வாதத்தைத் துவக்கினால்—நிருபர் துவக்கியதுபோல—வாதத்துக்கு முடிவு கிடையாது. இந்த "ஆரம்ப" வாதத்துக்கு ஆதாரமில்லை. ஏனெனின் புணர்ச்சியை அறவே ஒழித்த உத்தமர்கள் எல்லா நாடுகளிலும் இருந்திருக்கிறார்கள். மனித வருக்கத்தின் பெரும்பான்மையோருக்கு சாத்தியமில்லை என்றும் கூறி, புணர்ச்சி ஒழிப்பு வேண்டாம் அல்லது தேவையில்லை என்று சொல்லுவது வாதமாகாது. நூறு ஆண்டுகளுக்கு முன் பெரும்பான்மையோருக்கு சாத்திய மாகாதது இன்றைக்கு சாத்தியப்பட்டிருக்கிறது. எல்லையற்ற முற்போக்கு அடைய கால சக்கரத்தில், நூறு ஆண்டுகளை ஒரு "காலமாக"க் குறிப்பிடலாமா? பௌதிக ஆராய்ச்சியாளர்கள் கூறுவது உண்மையாயின், உயிர்க்குலத்தின் ஒரு பகுதிக்கு மனித உடல் கிடைத்தது "நேற்று"த் தானே! அதன் எல்லைகள் யாருக்குத் தெரியும்? அவைகளை யாவரே துணிந்து வகுக்க முடியும்? நன்மைக்கும் தீமைக்கும் மனித உடலில் எல்லையற்ற இடம் இருக்கிறது என்று நாள் தோறும் கண்டுபிடிக்கப்பெற்று வருகின்றது.

ஜிதேந்திரியத்தின் (புணர்ச்சிஒழிவின்) சாத்தியமும் தேவையும் ஒப்புக்கொள்ளப்படின், அதை அடையப்பெறும் சாதனங்களை நாம் கண்டு, வகுக்கவேண்டும். முன்னர் ஒரு கட்டுரையில் நான் கூறியதுபோல "ஒழுங்கு, அடக்கம்"—இவைகளின் கீழ் நாம் வாழவேண்டுமானால், நமது வாழ்வைத் திருத்தியமைக்கவேண்டும். தெருக்களில் சொல்லிக்கொள்ளுவதைப்போல, "வீசைக்கும் ஆசை, கூழுக்கும் ஆசை" என்ற உணர்ச்சி நம்மிடமிருக்கலாகாது. பிரஜா உற்பத்திக் கருவிகளுக்கு "சிட்சை" விதித்தால், அத்தகைய சிட்சையை ஏனைய கருவிகளுக்கும் விதிக்கவேண்டும். கண்ணையும், காதையும், நாசியையும், நாவையும், கைகளையும், கால்களையும் தம் வழி போக விட்டுவிட்டால், பிரஜா உற்பத்திக் கருவியை அடக்கியாள முடியாது. கோபம், மயக்கம், பைத்தியம் ஜிதேந்திரியத்தால் விளைந்தவை என்று தவறாகக் கூறப்படுகின்றன. வேறு புலன்கள் கட்டுக்கடங்காமலிருப்பதே இவைகளுக்குக் காரணமாகும். எந்தப் பாவத்துக்கும், இயற்கை விதிகளை எய்த்தாலும் அதற்கு நிச்சயமாய்த் தண்டனையுண்டு.

சொற்களுக்காக நான் போராடலாகாது. பிரஜா உற்பத்தியை அடக்கும் கருவிகளைப் போல, ஜிதேந்திரியமும் இயற்கையைத் தடுப்பதாயின், அவ்வாறே இருக்கட்டும். நபர்களின் நலத்தையும் ஜனசமூகத்தின் நலத்தையும் ஜிதேந்திரியம் நாடி, வளர்ப்பதால், அது சட்ட சம்மதங்கொண்டதாகும். ஏனைய சாதனமோ, இருவரையும் இழிவுபடுத்துகின்றது; எனவே சட்ட சம்மதம் பெறாது. பிரஜா உற்பத்தியை ஒழுங்குபடுத்துவதற்கு, ஜிதேந்திரியமே உறுதியான ஒரேவழியாகும். கருவிகளின்மூலமாய்ப்பிரஜா உற்பத்தியை அடக்க எத்தனிப்பது மனித வருக்கத்தைத் தற்கொலை செய்வதாகும்.

சுரங்க முதலாளிகள் தவறான துறையில் இருந்தும் அவர்கள் வெற்றிபெறுவார்களாயின், அது தொழிலாளர்களின் ஜனப் பெருக்கால் அல்ல; ஆனால் அவர்கள் தங்கள் வாழ்க்கைத் துறைகளனைத்திலும் இதுவரையிலும் அடக்கம் காண்பிக்காததேயாகும். தொழிலாளர்களுக்குக் குழந்தைகள் இல்லையாயின், முன்னேற்றத்துக்கு அவர்களுக்குத் தூண்டுதல் இருக்காது. கூலியதிகம் வேண்டுவதற்கு அவர்கள் தக்க, ருசுவான ஆதாரவு காண்பிக்க முடியாது. மதுபானம், சூதாட்டம், சுருட்டுக் குடிப்பு—அவர்களுக்குத் தேவையா? இவ்வளவையும் செய்துகொண்டிருக்கும் சுரங்க முதலாளிகளின் கை தாக்கி நிற்கின்றது என்று பதில் சொல்லக்கூடுமா? முதலாளிகளைக் காட்டிலும் தாங்கள் உயர்ந்தவர்கள் என்று தொழிலாளிகளால் காண்பிக்க இயலவில்லையாயின், உலகத்தாரின் அனுதாபத்தை வேண்ட, அவர்களுக்கு என்ன உரிமை இருக்கின்றது? முதலை வளர்த்து முதலாளிகளைப் பெருக்கடையச் செய்வா? ஜனநாயக ஆட்சிக்காலத்தில் நல்லுலகம் தோன்றும் என்று ஆசை வார்த்தை காண்பிக்கப்பெற்று, ஜனநாயகத்தைத் தொழவேண்டும் என்று நாம் வற்புறுத்தப்படுகின்றோம். முதலினாலும் முதலாளிகளினாலும் விளையும் தீமைகளை மகத்தான அளவில் மீண்டும் நாம் கொணரவேண்டாம்.

ஜிதேந்திரியம் எளிதான காரியமல்ல என்று துயரத்துடன் நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அதன் மெதுவான போக்கு நமக்கு சஞ்சலத்தை உண்டாக்கவேண்டியதில்லை. பதறிய காரியம் சிதறும். ஏழைகளின் அபரிமிதமான "குழந்தைப் பிறப்பின்" தீமைகளை அவசரப்பட்டு ஒழிக்க முடியாது. ஏழைகளுக்காக ஊழியம் செய்ய முற்படுபவர்கள் செய்யவேண்டிய கருமமோ மகத்தானதாகும். தங்களுடைய அனுபவக் களஞ்சியத்தினின்றும் உத்தமர்கள் உலகத்தாருக்கு அளித்திருக்கும் "ஜிதேந்திரியத்தின்" படிப்பினையை அவர்கள் வாழ்வில் மறந்து நடக்கவேண்டாம். அவர்கள் நமக்கு அளித்திருக்கும் மூலாதாரமான உண்மைகள், எல்லா சந்தர்ப்பங்களிலும் அவர்களால் நன்கு சோதிக்கப்பட்டுள்ளன. உத்தமர்கள் அனைவரும் சமுதாயமாக உபதேசம் செய்தது, ஜிதேந்திரியத்தின் தேவையேயாகும்.

---



# கருடபுராண ஆராய்ச்சி.

(சென்றவாரத் தொடர்ச்சி.)

அன்னரூபமாயும், ஆம (காமக்கிரி யைகள்) ரூபமாகவும், இரணிய (பொன்) ரூபமாகவும் சிரார்த்தம் செய்யலாம். எண்ணெய் நிறைந்த குடத்தைக்கொடுத்தால், சமஸ்த பாபமும் நசித்துப் போம்.

பொன்னால் குடங்கள் செய்து பாலும் நெய்யும் நிறைய வார்த்துக் கொடுத்தால் மிக விசேடம். உப்பு விஷ்ணு லோகத்தில் உண்டானபடியால், உப்புத்தானம் அதிவிசேடம்; இத்தானம் சுவர்க்கபலனைத்தரும். பிராமணர் பூணும் நூலுக்குப்பருத்தி ஏதுவானமையால், பருத்திதானம் மிகவும் பெருமையுடையது. காலனது ஆயுதங்கள் இரும்பாலானவையாதலால், மரிக்கும் காலத்தில் இரும்புத்தானஞ் செய்யின் இயமன் உவப்படைவன். இத்தானம் செய்த வீட்டில் இயமன் அடியெடுத்து வைக்கமாட்டான். சிரவண பூஜை செய்தவுடனே, பன்னிரண்டு கலசங்களில் புனலோடு அன்னம் நிறைத்துப் பிராமணருக்குக் கொடுத்தால், யமலோகத்தில் ஜீவனுக்கு வேண்டிய நன்மைகளைச் சிரவணர் செய்வர். அவர்கள், பாவத்தை இயமதூதனுக்கு எடுத்துக்காட்டாமல், புண்ணியத்தை மட்டும் காட்டுவர். தண்ணீர்க்குடம் தானஞ் செய்யின் யம தூதர்கள் திருப்தியடைந்து, ஜீவனை வருத்தார். இயமனது வாகனமாகிய எருமைக்கடாவை அதிகபொருளொடு தானஞ் செய்தால் யமபயமில்லை.

யானையும் குதிரையும் கொடுத்தால் விசேஷ புண்ணியமுண்டு. வெற்றிலை பாக்குப் புஷ்பம் தானஞ் செய்தால், யமதூதர் சந்தோஷித்துச் சீவனை வருத்தார். நல்ல மரத்தில் படுக்கைக் கட்டில் செய்து, தங்கத்தாலும் வெள்ளியாலும் பூண்கள் கட்டி, முத்து மாலைகளாலும் பூமாலைகளாலும் அலங்கரித்து, பாய் விரித்து, தீபம் சந்தனம் புஷ்பம் தாம்பூலம் வாஸனாதிரவியங்கள் நீருடன் செம்பு அலங்காரார்த்தமாயும் லீலார்த்தமாயும் ஸ்திரீ புருஷர்களுக்கு வேண்டிய மற்ற பொருள்கள் ஆதிய பல்வகைப் பொருள்களையும் அக்கட்டிலில் வைத்து, யோக்கியமான புரோகிதருக்குத்தானஞ்செய்து, அவரை வலம் வந்து தண்டஞ் சமர்ப்பித்தல் மிகச்சிறப்பாகும் (இவைகளெல்லாம் விஷ்ணுமூர்த்திகூறிவரும் அறவுரைகள் என்பதை வாசகர்கள்மறந்துவிடக்கூடாது.) துர் மரணமாய் இறந்தவருக்கு, நாராயண பலி செய்தல் வேண்டும். அதாவது, சாதாரணம் போல் எல்லாக்கிரியைகளையும் செய்வதுடன், தங்கத்தினால் விஷ்ணுவிக்ரகமும், வெள்ளியால் பிரம விக்ரகமும், தாமிரத்தால் ருத்ர விக்கிரகமும், இரும்பினால் யமப்பிரதிமையும் செய்து வைத்து, ஐந்து கும்பங்களில் நவதானம் பெய்து வைத்து, கிரியை செய்து, தானஞ் செய்தல் வேண்டும். அதனுடன் வேதமோதுவோருக்குப் பயிருடன் பூமி தானமும், கன்றுடன் பசுவும், சம்பா நெல்லும் கொடுக்க வேண்டும், எழுவகைத்தான்யங்களைத்தானஞ் செய்தால், யமபுரி அரண்மனைச் சேவகனுகிய தருமத்துவசன் மகிழ்ந்து புண்ணியஞ் செய்த ஜீவன் என்று யமனுக்கு விண்ணப்பம் செய்வான்.

இவ்வாறு இப் புராணம் முழுவதும் தானத்தின் பெருமையும், யம தண்டனையின் கடுமையுமே விவரிக்கப்பட்டிருக்கின்றன. புரோகிதருக்குக் கொடுத்தால் யமபயமில்லை; கொடுக்காவிட்டால் யம பயமுண்டு என்பது தான் பல்லவி. கொடுக்காவிட்டால் ஆன்மா பசிதாகம், இருள், ஆகிய வற்றால் துன்புறும் என்பது அநுபல்லவி. புரோகிதருக்கும் யமதர்மராஜனுடைய சபைக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதுபோலும், கொடுத்தவர் கொடுக்காதவர் என்ற விபரம் எழுதியனுப்பப் பெறுவதுபோலும், விஷயங்கள் வற்புறுத்தப் படுகின்றன. இப்படி யமலோகம் நரகலோகம் ஆகியவற்றைக் கற்பனையாகச் சிருஷ்டித்து வைத்துக்கொண்டு புரோகிதர்கள் ஜனங்களை ஏமாற்றுகிறார்கள். யமலோகத்தைப்பற்றி நேரே கண்டுவந்த பேராசிரியர் எழுதுவதுபோல், இக்கருடபுராணத்தில் புரோகிதர் பயங்கரமாக வருணித்துள்ளார். அது இருக்குமிடம், தூரம், விஸ்தீரணம், ஊர்நிலை, ஜனத்தொகை, உத்யோகஸ்தர்களின் நிலைமை, ஆகியவற்றைப் பற்றிச் சரியான தோரணையில் புளுகியிருப்பது கவனிக்கற்பாலது. யமபுரிப்பெருமை வருமாறு:—

மனுஷலோகத்திற்கும் யமபுரிக்கும் இடையில் எண்பத்தாறாயிரங்காதவழி யுளது. இது தென் திசைக்கும் நிருதி திசைக்கும் நடுவில் உளது. இரவிலும் பகலிலும் நடந்தே வழியைக் கடக்க வேண்டும். வழியில் சூரி போன்ற இலையையுடைய அசிபத்திரவனம் இருக்கிறது. உருக்கிவிட்ட செம்புபோல் காந்துமிடமும், குளிர்ந்த இடமும், இருண்ட இடமும், சீயாலும் இரத்தத்தாலும் விஷ ஜெந்துக்களாலும் நிறைந்த வைதாரணி நதியும், கக முக்கிய பட்டினங்களும் உள்ளன. யமபுரி கசச-காதவழி அகலமுள்ளது. அச,000 பிராணிகளையுடையது. யமபுரியில் முக்கிய "ரிஜிஸ்ட்ரார்" சித்திரகுப்தன். சிரணவர் கீழ்ப்பட்ட உத்தியோகஸ்தர்கள். யம கிங்கரர்கள் வேலைக்காரர். யமதர்மனே தலைவன். பாவம் செய்வோர் புகும் தீவாய்நரகம் எண்பத்து நான்கு லக்ஷம். தண்டனை விதம் பல நூறு வகைப்படும். பலவித கொடியநோய்கள் யம லோகத்தில் தயாராகஇருக்கின்றன. இறந்தவரது ஜீவன் வாயு சரீரம்பெற்று, யமதூதர்களோடு யமலோகம்போய் மீண்டுவந்து, வருந்திப் பிண்டத்தால் கருமசரீரம்பெற்று, மாஸ்யம் முதலிய வற்றால் பசிதாகம் தீர்ந்து, திரும்பிப்போய் யமதண்டனைக்குள்ளாகிறது.

இந் நூலில் வேறு பல விநோதமான அறவுரைகளும் எழுதப்பட்டுள்ளன. அவைகளைப் படித்துப் பார்த்தால், இதனை எழுதிய புரோகிதரது மூளையின் அபார சக்தி புலனாகும். அவை வருமாறு:—

(க) 'புத்' என்ற நரகத்தினின்றும் தாய் தந்தையரைக் காப்பாற்றுவோனே புத்திரன். புத்திரனில்லாதவன் நரகமன்றி நல்லுலகடையான். ஆதலால் எப்படியாவது புத்திரனைப் பெற்றுவிட வேண்டும். (உ) சஹகமனம்செய்த—உடன் கட்டை ஏறின புண்ணியவதி மூன்றரைக்கோடி தேவ வருஷம் சுவர்க்கத்தில் கணவனோடு இன்பந்துய்ப்பள். (ங) ஏழு அல்லது எட்டு வயதுக் கன்னிகையை மணந்தவன் சுவர்க்கம் அடைவான். (ச) தனக்குக் கீழ்ப்பட்ட குலத்தானை நேசித்தலும், பிராமண பக்திசெய்யாமலிருத்தலும், இதிகாச புராணங்களைப் பொய் என்றலும், புரோகிதனை அவமதித்தலும் பெரும் பாவமாம். (இவ் வாக்கியத்திலிருந்து அந் நாளிலும் பகுத்தறிவுடைப் பெரியார், புரோகித மதத்தையும் புராணமதத்தையும் ஒருங்கே வெறுத்திருக்கின்றனர் என்பது தெற்றென விளங்குகிறது.) (ரு) சூத்திரனாயில் பிறந்தவன், பிராமணரே தெய்வமென்று நினைத்துப் பக்தி செய்து, அவரிட்ட தொழில் புரிந்து தாசனாய் ஒழுகுவனேல், நற்கதியடைவன். (சு) எள் எமது வேர்வையினின்று உண்டான படியாலும், குசைப்புல் ஆகாயத்தில் உண்டான படியாலும் மிக விசேஷமுடையன. (எமது என்று விஷ்ணு மூர்த்தி கூறுகிறார் என்பதை வாசகர்கள் மறக்கமாட்டார்கள்.)

இந்நூலை ஒரு அறிவாளி வாசித்துப் அறிவானேயானால், இந்நூல் முழுவதும் அபத்தக்களஞ்சியமாக இருப்பது புலப்படும். இந்நூல் வீண் பயத்தையும் பொருளற்ற கிரியைகளையும் வற்புறுத்தி, மூடபக்தியை வளர்த்து, ஜனங்களைப் பெரிதும் துன்புறுத்துவதாதலால், இதனைப்பொது ஜனங்கள் எங்கும் பரவாதபடி சீக்கிரத்தில் ஒழித்து விடுவதற்கு முயலுதல் வேண்டும். இந்நூலைப் பறிமுதல் செய்து, இனிமேல் வெளியிடுதல் கூடாதெனச் சட்டஞ் செய்தற்கும் வேண்டுவன செய்தல் நலமாகும்.

வாகீசபக்தன்.

---

## தேர்தல் விநோதம்.



வாக்கு சேகரிப்பவர் (நின்றுகொண்டு):—போக்கிரிகள் என்னை எவ்வாறு செய்திருக்கிறார்கள், பார்த்தீர்களா?

அபேட்சகர் (உட்கார்ந்து):—இது என்ன? மண்டை உடைந்திருக்கிறது; உடை கிழிந்திருக்கிறதே!

வாக்கு சேகரிப்பவர்:—இவை யாவும் எதிர்க்கட்சிப் போக்கிரிகளின் வேலை. தங்களுக்காக "வோட்" சேகரித்ததின் பயன். எனது உற்சாகத்துக்காக, அவர்கள் தடி கொண்டு என்னை நையப்புடைத்து விட்டார்கள். கல் எறிந்தார்கள்.

அபேட்சகர்:—என்னால் என்ன செய்ய முடியும்?

வாக்கு சேகரிப்பவர்:—பண உதவி செய்வதாகச் சொன்னதை நான் தங்களுக்கு ஞாபக—

அபேட்சகர்:—எல்லாம் எனக்குத் தெரியும். உன்னைப்போல தெருச்சண்டை இழுப்பவர்களை என்னால் ஆதரிக்க முடியாது. போ.

---

# பாவ மன்னிப்புச் சீட்டு.

பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பாவில் ஒரு பெரிய சீர்திருத்தம் நிகழ்ந்தது. தற்காலம் ஐரோப்பா தேசம் அடைந்திருக்கும் முன்னேற்றத்திற்கு இச் சீர்திருத்தமும் ஒரு முக்கிய காரணமாகும். இது நடைபெறுவதற்குமுன் அத்தேசம் பலவகையாகப் பொறுக்கமுடியாத துன்பங்களில் ஆழ்ந்திருந்தது. சமூக வாழ்வு பெரிதும் குலைவுற்று உரிமையற்ற நிலையில் இருந்தது. மதகுருமார்கள் (Popes) மக்களைப் பெரிதும் துன்புறுத்தி வந்தனர். அரசரும் பொதுமக்களும் அவர்களுடைய ஆணைக்குக் கீழ்ப்படிந்தே நடக்க வேண்டியவர்களாக இருந்தனர். மிகுந்த நிலப்பரப்பும் பொருட் பெருக்கமும், நிறைந்த செல்வாக்கும் உடையவர்களாக அவர்கள் அரசர்க்கரசராக இறுமாப்புடன் வாழ்ந்து வந்தனர். அவர்களுடைய நிலயங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பெரிய ஜமீனாகவே விளங்கிற்று. அவர்களே கற்ற வகுப்பாராக இருந்தபடியால், சமயம், சமூகம், அரசியல், நீதி பரிபாலனம் ஆகிய துறைகளைப்பற்றிய உரிமைகள் அனைத்தும் அவர்கள்கையிலேயே இருந்தன. பொது ஜனங்கள் கல்வி யறிவுப் பெருக்கமின்மையால் அடிமை வாழ்வு வாழ்ந்தனர்.

கிறிஸ்தவ மதத்தின் வேதமாகிய பைபிள் கிரேக்க பாஷையில் இருந்தது. அதன் உட்பொருள் பாதிரிகளுக்கே தெரியும்; பொது ஜனங்களுக்குத் தெரியாது. மூட நம்பிக்கைகளைப் பெரிதும் வளர்த்துப் பாதிரிகள் பொது ஜனங்களை மிகவும் ஏமாற்றி வந்தனர். இயேசு கிறிஸ்துவின் பெயராலும், சமயத்தின்பெயராலும், புண்ணியத்தின் பெயராலும் அவர்கள் அக் கொடுமைகளை இழைத்து வந்தனர். பாவ மன்னிப்புக்குச் சீட்டுகள் கொடுத்துப் பணத்தைக் கொள்ளையடித்து வந்தனர். ஒன்றும் அறியாத பாமர ஜனங்களும் பணக்காரர்களும், பாதிரிகளுடைய திருக்கரத்தால் எழுதித் தரப்பெற்ற சீட்டால் பாவம் பஞ்சாய்ப் பறந்து போய்விடும் என்று எண்ணி இன்புடனும், அன்புடனும் அவ்வேமாற்றத்தில் ஈடுபட்டிருந்தனர். நாளுக்கு நாள் இச்சீட்டு விற்பனை பெரிதும் வளர்ந்து வந்தது. செல்வர்கள் லக்ஷக்கணக்கான ரூபாய்களைக் கொடுத்து இச்சீட்டைப்பெற்று மகிழ்ந்தனர். இவ்வாறு பாதிரிகளுடைய கொடுமை, நமது மக்களை மூட்டுப் பூச்சியாகப் பிடுங்கும் புரோகித மதத்தைப் போல் வளர்ந்து கொண்டே வந்தது. அக் கொடுமையினின்றும் விடுபட்டு மக்கள் புத்துயிர் பெற்றுச் சமய சீர்திருத்தம் செய்து கொள்ளவேண்டுவது இன்றியமையாத தேவையாக ஆகிவிட்டது.

ரோம் தேசத்தில் இத்தாலியில் பொது மக்களிற்பலர் கிரீக் பைபிளைப் படித்தனர். பைபிள் புகலுவதற்கும், பாதிரிகள் புகலுவதற்கும் அதிகமான வேற்றுமைகள் இருப்பதைக் கண்டு கண்ணீர் வடித்தனர். பாதிரிகள் பெரிய ஏமாற்றக்காரர் என்பதை இனிது உணர்ந்து கொண்டனர். ரோமன் அக்காடமி எனும் ஆராய்ச்சி சபையினை ஏற்படுத்தினர். பைபிளுக்குப் புத்துரை விரித்து, பாதிரிகளுடைய குற்றங்குறைகளை எடுத்துக் காண்பித்தனர். பாதிரிகளுடைய மூடத்தனத்தையும் வீணான பெருஞ் செல்வாக்கையும் பார்த்து நகைத்தனர். இவ் வாராய்ச்சி யறிவு இத்தாலியிலிருந்து ஜெர்மனிக்கும், இங்கிலாந்துக்கும் பரவியது. இத்தாலியில் உண்டாகாத ஒரு பேருணர்வு இத்தேசங்களில் தோன்றியது. அதாவது, "நீண்டகாலமாக வழக்கத்திலிருந்து வருவதற்காகப் பிழை சிறிதாகாது; உண்மை புதிதாயிருப்பினும் உண்மையே" எனும் உண்மைச் சீர்திருத்த உணர்வேயாகும். எனவே, பாதிரிமார்களுடைய ஆட்சிக்கும், அந்தஸ்துக்கும் பயப்படாது வேலை செய்யச் சிலர் தோன்றுவாராயினர். இராஸ்மஸ் என்பவன் ஒரு முக்கியமான தொண்டன். அவன் பாதிரிகளுடைய இழிதகைமையை எடுத்துக்காட்டி நன்கு பரிகசித்தான். கிரீக் பைபிளை லத்தீனில் மொழி பெயர்த்துத் தனது அபிப்பிராயத்தையும் வெளியிட்டான். "ஆராய்ச்சி கூடாது; தேவபாஷையினின்றும் வேறு பாஷையில் பெயர்க்கக் கூடாது; பாதிரிகளே பொருளுரைக்கத் தகுதி உடையவர்கள்" என்ற காலம் அடியோடு பறந்தே போய் விட்டது. (தொடரும்.)

# அன்னிய நாட்டுக் கல்வி

(லாலாலஜபதிராய் "பீபிள்" பத்திரிகையில் நீண்டதொரு கட்டுரை எழுதியிருக்கிறார். அதன் சிறப்பான பகுதிகளை மொழிபெயர்த்துத் தருகிறோம்.—ப-ர், ஊழியன்.)

* * *

ஐரோப்பாவிலிருந்து நான் சமீபத்தில் நம்முடைய நாட்டுக்குத் திரும்பிவந்தது நண்பர்களுக்குத் தெரியும். ஆங்கில நாட்டில் இந்திய மாணவர்கள் இருக்கும் நிலையையும் அவர்களுடைய வருந்தத்தக்க வரலாறுகளையும் சொல்லாமலென்னால் இருக்க முடியவில்லை. அவர்களிற் பெரும்பான்மையோர் தங்கள் ஆன்மாவை இழந்துவிட்டார்கள் என்று என்னிடம் பலர் கூறினார்கள். அவர்களிடம் இந்தியத் தன்மை சிறிதும் இல்லை; அவர்களுடைய வாழ் நாளைப் பாழாக்கும் பழக்கங்களையும் நோய்களையும் அவர்கள் சம்பாதித்துக் கொள்ளுகிறார்கள். இதனால் உண்டாகும் துயரத்தையும் அவமானத்தையும் என்னென்று சொல்லுவது!

* * *

அந்நிய நாட்டுக்குச் செல்லுவதே ஒரு படிப்பு என்பது உண்மை. ஆனால் அதற்கு ஒரு காலமும் எல்லையும் உண்டு. கல்வியின் பொருட்டு, முதல்தர நாடுகளில் சில, தங்கள் இளைஞர்களை அயல் நாடுகளுக்கு அனுப்பி வருகின்றது. ஆனால் நமது நாட்டின் நிலைமையோ வேறாகும். அந்நிய நாடுகளுக்கு உயர்தரக் கல்விக்காகச் செல்லும் இளைஞர்களின் தொகையை ஜப்பான் இப்பொழுது குறைத்துக்கொண்டு வருகின்றது. தங்கள் நாட்டிலேயே உயர்தரக் கல்விக்கு ஏற்றவைகளை அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். சிறப்பான சில பயிர்ச்சிகளுக்கு மட்டுமே, ஜப்பானிய இளைஞர்கள் இப்பொழுது அந்நிய நாடுகளுக்கு அனுப்பப்பெற்று வருகிறார்கள்.

* * *

நம்மைக்காட்டிலும் சேவலமான நிலையில் சினர்கள் இருக்கின்றார்கள். எனவே அவர்கள் தங்கள் இளைஞர்களை அந்நிய நாட்டுக்கு அனுப்பவேண்டியிருக்கிறது. இத்தகைய வழக்கத்தை ஆப்கானியர்கள் சமீபகாலமாக கைக்கொண்டு வருகிறார்கள். ஐரோப்பாவுக்குப் பக்கத்தில் தங்கள் நாடுகள் இருப்பதால், துருக்கியர்களும் எகிப்தியர்களும், தங்கள் இளைஞர்களை முதல்தரக் கல்வி கற்பிக்கப்பெறும் ஐரோப்பிய நகரங்களுக்கு அனுப்பி வைக்கிறார்கள்.

* * *

சாதாரணக் கல்விக்கே, உலக அனுபவம் சிறிதுமில்லாத சிறுவர்களையும் சிறுமிகளையும் அயல் நாடுகளுக்கு அனுப்பும் நாடுகள் உலகத்தில் நம்முடைய நாட்டைப்போல, வேறு எதுவும் இல்லை. இந்தியாவில் கல்வி வசதிகள் மெள்ளப் பெருகிவருகின்றன; என்றாலும் படிப்புக்காக அந்நிய நாடுகளுக்குச் செல்லும் இந்தியச் சிறுவர்களும் சிறுமிகளும் தொகையில் வளர்ந்துகொண்டு வருகிறார்கள்.

* * *

ஆங்கில நாட்டுக்கும் அயர்லாந்துக்கும் செல்லும் இந்திய இளைஞர்களில் முக்கால் தொகையினர் இந்தியாவிலேயே கல்வி போதிக்கப்படலாம் என்பது என் எண்ணமாகும். ஆனால் அவர்கள் அந்த நாடுகளுக்குப் போவதன் காரணம் என்ன? அந்நாட்டுப் பட்டங்களுக்கு இந்திய அரசாங்கத்தாரும் சுதேச சமஸ்தானங்களும் அதிக மதிப்புக் கொடுப்பதே காரணமாகும். இந்தியப் பல்கலைக் கழகப் பட்டங்களுக்கு அவ்வளவு மதிப்பு இல்லை. ஆரம்பச் சோதனையில் தேறாத சிறுவர்களும் ஆங்கில நாட்டுக்கு அனுப்பப்பட்டுவருவதைக்காண நான் மிகுதியும் வெட்கப்பட்டேன். ஆங்கில நாட்டுக்கு வந்ததும், அந்த நாடு சொர்க்கத்தைப் போல அவர்களுடைய கண்களில் படுகின்றது. எனவே வாழ்வு நிலை தவறி, பலர் கெட்டுப்போவது வியப்பல்ல.

* * *

அவர்கள் முழுதும் ஆங்கில மயமாகி விடுகிறார்கள். ஆங்கிலப் பழக்க வழக்கங்களிற் சிலவற்றை இந்தியர்கள் கைக்கொள்ளலாகாது என்று நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் ஆங்கில நாட்டில் கல்வி கற்றுவரும் நமது இளைஞர்களில் பெரும்பான்மையோர் தங்கள் இந்தியத் தன்மையை அறவே இழந்து வாழ்வதைக்கண்டும், எனது மனத்துயரத்தை அடக்கிக் கொள்ள முடியாது. அவர்கள் உடையில், நடையில், பழக்கங்களில், எண்ணங்களில், இன்பமனுபவிப்பதில், உணர்ச்சியில்—எல்லாவற்றிலும் தங்கள் இந்தியத் தன்மையை இழந்து நிற்கின்றார்கள். ஆனால் அவர்களிற் பெரும்பான்மையோர் தீவிர தேசபக்தர்கள் என்பதை மட்டும் என்னால் ஒப்புக் கொள்ளாமலிருக்க முடியாது.

* * *

தங்கள் நாட்டின் நாகரிகத்துக்கும் அமைப்புகளுக்கும் ஏற்றவாறு தான் தேசபக்தியும் தேசிய நோக்கமும் அமையப்பெறும், பெறவேண்டும் என்பதை இந்திய மாணவர்கள் மறந்து விடுகிறார்கள். இந்தக் காரணம் பற்றியே, ஒவ்வொரு ஆங்கிலேயனும் எங்கு இருந்தாலும் தனது நாட்டு நாகரிகம், பழக்கம், உடை முதலியவைகளை மாற்றிக்கொள்ளுவதில்லை. ஆங்கில சாமான்கள், ஆங்கில சித்திரங்கள், ஆங்கில இலக்கியம், ஆங்கில பத்திரிகைகள்—இவைகளின் நடுவே வேண்டுமென்றே இருந்துகொண்டு, ஆங்கிலேயன் தனது வாழ்வை நடத்துகிறான்.

* * *

இந்தியனோ தனது நாட்டின் கரையைத் தாண்டியதும், அறவே உருவும் உயிரும் மாறிப்போகின்றான். இந்திய உடுப்புகளை அணிந்துகொண்டிருக்கும் அல்லது இந்தியத் தலைப்பாகையை மட்டுமாயினும் வைத்துக்கொண்டு அயல்நாட்டில் வசிக்கும் இந்தியனை நான் வியப்புடன் மதிக்கின்றேன். இவ்வாறு நான்கூட, எப்பொழுதும் செய்ததில்லை என்று வருந்துகின்றேன். என்னைப்பார்த்துப் பிறர் வெறிக்கலாகாது என்பதுதான் இதற்குக் காரணமாகும். ககூஉச-ம் ஆண்டில் நான் ஆங்கிலநாட்டில் இருக்கையில், அநேகமாய் நான் இந்திய உடையையே தரித்திருந்தேன். அதனால் எனக்கு யாதொரு அசௌகரியமும் ஏற்படவில்லை.

* * *

சௌகரியத்தையும் செலவையும் கருதி, ஆங்கில உடையை ஆங்கில நாட்டில் இந்தியர்கள் அணிந்துகொள்ளுவதில் எனக்கு ஆட்சேபமில்லை. ஆனால், அதனால் வாழ்வும், நோக்கும், உணர்ச்சியும் அறவே மாறிப்போவதைக்கண்டு வருந்துகின்றேன். இந்தியாவுக்கு அவர்கள் திரும்பி வந்தபின்னரும் அவைகள் இந்தியர்களிடம் தொத்திக்கொண்டிருக்கின்றன. இந்திய மாணவர்களின் ஆங்கில நாட்டு வாழ்வினால் ஏற்படக்கூடிய பணச்செலவு, காலச்செலவு, ஆபத்து, இவைகளைக் குறிப்பிடுவதே எனது நோக்கமாகும்.

* * *

ஆங்கிலக் கல்விபெற்று, ஆங்கில நாட்டில் வியாபாரம் செய்துவரும் பஞ்சாபி நண்பர் ஒருவர், பஞ்சாபி இளைஞர்கள் ஆங்கிலநாட்டில் கேவலமாக வாழ்ந்துவரும் கதைகளை என்னிடம் சொன்னார். அவர்களுடைய கௌரவத்தையும், தன் மதிப்பையும், வெட்கத்தையும் மறந்து, அவர்கள் ஆங்கிலநாட்டில் வாழ்கின்றனராம்! அந்த நாட்டிலிருக்கும் "தீமை"த் தூண்டுதல்களை நம்மில் திடமனத்தார்களால்கூட எதிர்த்துப் போராட முடியாது.

* * *

மாணவர்களை நான் கடிந்து கொள்ளவில்லை. அவர்களைக் கெடுக்கும் பொறுப்பு அவர்களுடைய பெற்றோர்களைச் சார்ந்ததாகும். பெற்றோர்கள், முட்டாள்களாக, குறுகிய நோக்கங்கொண்டு, பேராசை பிடித்து இருப்பார்களாகில், இளைஞர்கள் என்ன செய்வார்கள்?

* * *

முன்பின் யோசனையின்றி, இந்திய இளைஞர்களை ஆங்கில நாட்டுக்கு படிப்பின்பொருட்டு அனுப்பும் வழக்கத்தைத்தடுக்கத் தலைவர்கள் இந்தியாவில் தக்க கிளர்ச்சி செய்யவேண்டும். குறிப்பிட்ட சில இளைஞர்களைமட்டுமே, சிறப்பான பயிர்ச்சிக்கு அந்நிய நாடுகளுக்கு அனுப்பிவைத்தல் வேண்டும். ஆங்கிலநாட்டில் இந்திய மாணவர்கள் விருப்புடன் ஏற்கப்படவில்லை. இந்தியத் தலைவர்கள் தங்கள் ஒத்துழையாமை மனோபாவத்தை ஒழித்து, கல்விப்பிரச்னையைப்பற்றித் தீவிரமாகக் கலந்து யோசித்தல் நலம். கிராமப்படிப்பு, தொழில் கல்வி, உயர்தரக்கல்வி, ஆராய்ச்சி இவை சம்பந்தமான படிப்புவசதிகளை அமைத்துக்கொடுக்க, தலைவர்கள் அரசாங்கத்தாரை வற்புறுத்தவேண்டும்.

---

# புது வாழ்வின் குறிகள்.

[ வ. ரா. ]

சித்திரை மாதத்தில் அந்திப்பொழுதில் "தென்றலான புலி வந்து கோபமொடு" அண்ணாமலை ரெட்டியாரைச்சீறின அவஸ்தையை நீங்கள் கேட்டிருக்கிறீர்களா? அந்திப்பொழுதும், தென்றற் காற்றும், அழகிய நிலவும், "மழலை"க்குழந்தையும், காதல் மனையாளும், கவிக்காதலனும், உழைப்பின் ஓய்வும், சுதந்திரப்பெருமையும், ஒன்று சேர்ந்து கொண்டால், உலகத்தின் இயற்கையும் படைப்பின் சலனமும் சங்கீத மயமாய்த் தோன்றும். பழைய உயிர் மங்கி, புத்துயிர் தோன்றும் பொழுது, இயற்கை சுருதி கூட்டும்; படைப்பு ஆனந்தப்பாட்டு இசைக்கும்; மனிதன் களியாட்டம் கொண்டு, தாளம் போட்டு ஆடுவான். ஆடலும் பாடலும் விடுதலைக்கு அறிகுறிகள்.

* * *

சேரிடமறிந்து சேர்ந்து, செவ்வனே வேலையைச் செய்து முடித்த மனத்துக்கு ஏற்ற களிப்பைக் கவிதையிலும் கலையிலும் கண் காட்சியிலும் வைத்துக்காட்டலாம், ஊட்டலாம். இயற்கையில் அனவரதமும்தோன்றி மறையும் அற்புதக் கண் காட்சியை மனிதர்கள் பொருள் படுத்துவதில்லை. மலையில் முளைக்கும் "சஞ்சீவி" அமுத சஞ்சீவி எனப்படும். தோட்டத்தில் நமது காலடியில் பயிராகும் "சஞ்சீவி" கொல்லைப் பச்சிலையாகும்; வெற்று இலையாகும். இயற்கைக் காட்சியின் அற்புதச்சித்திரத்தைக்கண்டு, அனுபவித்து, ஆனந்தமடையாதவன் மனிதனா?

* * *

சோம்பிக்கிடக்கும் மாந்தருக்குக் களிப்பு மலிவாகிவிடுமா? அல்லலுற்று அமைதியை இழந்த அற்பனுக்கு அந்திவானம் என்னபயனை அளிக்கும்? வளம்குன்றிவரும் தமிழனின் உள்ளத்துக்குப்பளபளப்புடன் வெளிவரும் இளஞாயிறு எவ்வித உயிரைக் கொடுக்கும்? எத்தகைய உற்சாகத்தை ஊட்டும்? அடிமைத் தமிழனை சூரியன் காய்ந்துகொல்லும்; சந்திரன் ஜல தோஷத்தை உண்டாக்கும். சகோதரன் பங்கு கேட்க வந்த பெரும் பாவி என அடிமைத் தமிழனால் மதிக்கப்படுவான். சந்தேகக் கண்களால், குறுகிய நோக்குடன் பார்த்து, எதையும் தனது அற்ப அனுபவத்துக்குப் பொருந்தவில்லை என்று கர்வக் குரலில்விருது கூறிக்கொண்டிருப்பான்.

* * *

ஆனால் நாட்டில் உதித்திருக்கும் அற்புதங்களைப் பாருங்கள். சுருதியுடன் கலந்து, பக்க மேளங்கள் பக்குவமாய் அமைந்திருந்தால், தமது தொண்டைகளைச் சுத்தி செய்துகொண்டு, யாவரும் கனைத்துக்கனைத்துப்பாடத் துவக்கிவிடுவார்கள். சுருதியோடு கலந்தபாட்டின் தவறை எளிதிலே கண்டு சொல்லமுடியாது. ஆனால் தேர்ந்தகாதுகளை எத்தகைய சுருதியும் எய்க்கமுடியாது.

* * *

அதிகாலையில், குயில் பாடத்துவக்குகின்றது. இலேசாகக் காற்று வீசுகின்றது. மனிதனை மலைக்கச்செய்து மறைந்துபோன சூரியன் தங்க வட்டிலைப் போல அடிவானத்தில் தோன்றுகின்றது. சிறுகுழந்தைகள் கவலையற்ற உறக்கத்தினின்றும் எழுந்து மழலை மழை பொழிகின்றன. மனிதன் களிப்படைவது அவன் புத்துயிர் பெற்றதன் காரணமாக.

* * *

புள்ளினம் ஆர்ப்பது காலை வேளையில். முரசம் முழங்குவது விடியற் காலத்தில். சக்திமயமான சங்கீதம் தோன்ற, மனிதனுடைய சந்தேகம் தொலைந்துபோய், அவன் உள்ளம் ஒருமைப்படுகின்றது. உள்ளம் ஒருமைப்படுவது தான் விடுதலையாகும், முக்தியாகும். அடிமைப்பட்ட கூட்டத்தார் விடுதலையடையத் தூண்டுப்பெறுவது கவிகளினாலே. மனிதனுடைய விடுதலைச் செய்தியைத் தாங்கி நிற்பது கவிதையாகும்.

* * *

ஆனால் நமது தமிழ் நாட்டுக் கவி சுப்பிரமணிய பாரதியார், தமது வீரக்குரலால், விடுதலைச் சங்கை ஒலிக்குங்கால், "இயற்கைச் சகுனங்கள்" சரியாய் இல்லை. பாடும் குயில் எங்கேயோ பறந்தோடி விட்டது. பொன்னொளிர் சூரியன் மேகத்திரையில் பட்டு ஒளிந்து கொண்டிருந்தது. ஆது செல்லும் காற்று தூது சென்ற விடத்திலேயே தங்கிவிட்டது. மழலைக் குழந்தைகள் ஊமையர்களாகவும் உளர்வாயர்களாகவும் பிறந்தார்கள். எனினும் "பொழுது புலர்ந்தது யாம் செய்த தவத்தால்" என்று எவ்வாறோ, பாரதியாருக்குத் தெரிந்து விட்டது.

* * *

அலங்கோல வாழ்வு அபரிமிதமாய்த் தேங்கிக் கிடந்த வீதியைச் செப்பனிட்டு, அதை "மாதர் அணிகுற்ற" விந்தையைப் பாரதியார் எந்தக் கண்களைக் கொண்டு கண்டாரோ, அதை என்னால் கூறமுடியாது. "யாம் செய்த தவத்தால்" என்றார் பாரதியார். தமிழர்கள் தவம் செய்தது ஏனைய தமிழர்களின் கண்களுக்குப்படாமல், பாரதியாரின் தெய்வத் தன்மைகொண்ட கவிதைக் கண்களுக்குத் தென்பட்டது விந்தையாகுமா? மறைவிலே தமிழ்த்தாயும் அவளது அருமைப் புதல்வர்களும் தவம் கிடந்த சங்கதி, ஆன்ம உணர்ச்சியால் அவருக்கு மட்டும் விளங்கிற்று என்றே கூறவேண்டும்.

* * *

ஆங்காங்கு, தமிழ் நாட்டில் இனிப்பாடவிருக்கும் இளங்கவிக்குயில்களின் இன்னிசைக்குரலை பாரதியார் அந் நாளிலேயே கேட்டது கவியின் தவப்பயனாகும். விடுதலையடையத் தீர்மானம் கொண்டிருக்கும் அல்லது விரைவில் கொள்ளப்போகும் வீரத் தமிழ் நாட்டில், இப்பொழுது "இன்னிசைக்குயில்கள்" பாடுவதும், தோகை மயில்கள் ஆடுவதும், அவைகளைக் கண்டு ஏனையோர் இப்பொழுது களிப்படைவதும் சகஜம். "கொட்டு முழக்கு"க் கேட்பதற்கு முன்னமேயே, கலியாணம் விசாரிக்கச்சென்ற பாரதியார் தமிழ் நாட்டின் விடுதலைத் தூதர் என்று சொல்லவும் வேண்டுமா?

* * *

தெரு நடுவில் நாம் காணும் அற்புதமும் தியாகமும் நம் கண்ணிற் படுவதில்லை. பக்கத்திலே நாம் பார்க்கும் கஷ்டம், நமக்குப் பெரிதாகத் தோன்றுவதில்லை. எனினும் நாடக மேடையில், நாம் பார்க்கும் கஷ்டமும் தியாகமும் நம்முடைய உள்ளத்தில் அழுத்தமாகப் பதிகின்றன. குறிப்பிட்ட நான் கெல்லைக்குள், சிறப்பான பல நிகழ்ச்சிகள், கூட்டமாக, ஆனால் கலந்து குழப்பமுண்டாக்காமல், சந்தித்தால், அதனால் நமக்கு மனவெழுச்சி உண்டாகின்றது. தரிசனம், இசை, உணர்ச்சி, இவைகளைக் கொண்டு, கவி மனித உள்ளத்தை உயர்வு படுத்துகின்றான்.

* * *

கவிதை இன்னதென்று குறிப்பிட்டு, வருணித்து, சொற்களுக்குள் அடக்கிக் கூறுவது என்னால் முடியாது என்றார் ஒரு கவி. கவிதை கடவுளைப்போல. அது வாசாம கோசரம் (சொல்லுக்கு அடங்காதது). கவிதையை அனுபவித்தால் தெரியும். கவிதைக்கு நான்கெல்லை கட்டியமைக்கமுடியாது. இன்பத்தை ஊட்டுவது கவிதை. உயிரைப்பெருக்குவது கவிதை. உறக்கத்தைப் போக்குவது கவிதை. உற்சாகத்தை வளர்ப்பது கவிதை. கற்பனைக் கற்கள் பதிக்கப்பெற்ற மாணிக்க மாலையாகும் கவிதை. விசித்திர நவரத்தினங்கள் ஜொலிக்கும் மாலையாகும் கவிதை. காதலைத் தூண்டுவது கவிதை. கடவுளைக் காட்டுவது கவிதை. கவி எதற்கும் தோழன்; யாவருக்கும் ஊழியன். அவனே மனித வருக்கத்தின் ஒப்பற்ற தலைவன்.

* * *

மனிதர்களின் உள்ளங்களுக்கிடையே தெய்வதப்பாலம் சமைக்கும் சித்திரக்கொத்தர்கள் கவிகளாகும். குமரியை வேங்கடத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கும் விந்தை மாலுமிகள் கவிகளாகும். ஆங்காங்கே மழலைக் கவிதைகளைப் புனைந்துவரும் கவிகள் நமது தமிழ் நாட்டில் தோன்றியுள்ளார்கள். கவிச்சுவையும், கவித்திறனும், கற்பனையும் நிறைந்த தமிழர்கள், வானத்துக்குமேலே விரைந்தோடி வருகின்றார்கள். குகையில் மறைந்துகிடக்கும் இளஞ்சிங்கங்கள் வெளித்தோன்றி, விடுதலைக் கர்ச்சனை செய்யும் பொழுது, அடிமையின் அழுகைக்குரலை இனியும் தமிழ் நாட்டில் கேட்கமுடியுமா? தமிழர்களுக்குக் கண் திறந்துவிட்ட பாரதியாரின் புகழ் ஓங்குக!

---



# தனவணிகர் உலகம்.

## "எனக்கென்ன?"

சமூகத்தொண்டன் சாற்றுவது.

நமது தனவணிகர் உலகத்தில் இந்தப் பேச்சு மலிவு. "நமக்கென்ன" என்ற வாக்கியம் எல்லோர்க்கும் ரொம்ப சாதாரணம். எதற்கும் "நமக்கென்ன?" என்று கூறுகின்றனர். இந்தப் பேச்சுக் கடமையை உணர்ந்தோர்க்கு ஏற்றதன்று. இது சோம்பேறிகள்—அல்லது ஆற்றலற்றவர்கள் பேச்சு. நமது சமூகம் சீர்திருத்தத்தில் பிற்போக்கடைந்திருப்பதற்கு இந்த "நமக்கென்ன?" என்பதே முக்கிய காரணம். ஒருவர் ஒரு தவறு செய்தால் அதனைக் கண்டித்தல் எல்லோர்க்குங் கடமையல்லவா? "நமக்கென்ன?" என அனைவரும் இருந்துவிட்டால் அவர் எவ்வாறு திருந்துவார்?

இந்த "நமக்கென்ன?" என்பதைப் பொதுக்காரியங்களில் காட்டுவதைத் தவிரச் சொந்தக் காரியங்களில் காட்டுவதில்லை. ஒருவர் பொருளை இன்னொருவர் எடுத்துக் கொண்டால் பறிகொடுத்தவர் நமக்கென்ன என்றிருக்கின்றனரோ? அப்படிக் காரியங்களில் நமக்கென்ன என்றிருப்பது இல்லை. ஒருவர் நெறி தவறி நடந்தால் அதில் நமக்கென்ன நமது காரியத்தை நாம் பார்த்துக் கொள்வோம் என்றெண்ணி விடுகிறார். பொதுக் காரியங்களில் சிரத்தை ஏற்படும் வரை அந்த சமூகம் முன்னேறுதல் அருமை.

ஒரு கட்டுப்பாட்டை ஒருவர் மீறுகின்றார் என்று வைத்துக்கொள்வோம். அவரைத் தண்டிக்கவேண்டியது யார்? எல்லாரும் நமக்கென்ன வென்றிருந்தால் என் மீறுபவர் அஞ்சப்போகிறார்? முன்னே துன்மதி ஆண்டில் சில மாதங்கள் சீர்திருத்தத் தீர்மானங்கள் தடபுடலாகத் தாண்டவமாடின வல்லவா? அந்நாள் தீர்மானங்கட்கு முரணாக எவ்வளவோ காரியங்கள் நடந்தன. (பழயகூட்டத்தைப்பற்றி நான் பேசுகிறேன். சமீப நிகழ்ச்சியைப்பற்றி இங்கு ஒன்றும் பேசவில்லை. அது எல்லோர்க்கும் நன்கு தெரிந்ததே.) ஊராருக்கெல்லாம் தீர்மானத்திற்கு முரண் என்பது தெரிந்தும் நமக்கென்ன நமக்கென்ன என்றே எல்லோரும் விட்டுவிட்டனர். பிறகு அறிந்து சங்கத்தார் போய்க் கேட்க ஊராரும் சேர்ந்தே இல்லையென்று சத்தியம் செய்யச் செய்துவிட்டனர். பொய்ச்சத்தியம் என்பதும் அனைவர்க்கும் தெரியும். ஆனால் நமக்கென்ன நாம் என் இந்தப் பொல்லாப்புக்கு ஆளாக வேண்டுமென்று ஒவ்வொருவரும் கருதிவிட்டனர். தீர்மானத்தை மீறுபவர்க்கு எவ்விதக் கவலையுமில்லை. சத்தியம் செய்தால் போதும் என்று தாராளமாக முன் வந்துவிட்டார்.

இப்படி யிருக்குமானால் என்ன பயன்? நமக்கென்ன என்ற நிலை மாறினாலன்றி ஒரு சிறு பிரயோஜனமுமில்லை. நமக்கென்ன என்ற நிலை மாறுதற்கு வழி என்ன? அதற்கு வழி பொய் மாயமல்ல; இந்திரசாலமல்ல; ஏமாற்றுதலல்ல; கண்கட்டு வித்தையல்ல. இந்த மாதிரியான வஞ்சகங்கள் எதுவுமல்ல. உணர்ச்சியை உண்டாக்குதல் ஒன்றே அதற்கு வழி. "இது செய்யத்தக்கது; இது செய்யத்தகாதது; இது செய்தாரைக் கண்டிக்கவேண்டுவது கடமை" என்று உணருமாறு செய்தாலன்றி நமக்கென்ன என்ற சனியன் நம்மவரைவிட்டு அகலப் போவதில்லை. நமக்கென்ன என்பது தொலைந்தாலன்றிச் சமூகம் நன்னிலை யெய்தப் போவதில்லை என்பதைச் சிற்றறிஞர்கூட மறுக்கமாட்டார். நமக்கென்ன என்று கூறும் உணர்ச்சி இருக்கும்வரை என்ன செய்தும் ஆவது ஒன்றுமில்லை. சமூக விஷயத்தில் நமக்குத் தான் எல்லாம் என்று எண்ணுதல் வேண்டும். ஒவ்வொருவரும் சொந்தமாகப் பாவித்தாலல்லவா பொதுக் காரியங்கள் ஒழுங்குபெற நடக்கும்?

சீர்திருத்தக்காரர்கள் யாரும் நமதுசமூகத்தில் இன்று இருப்பாரானால், அவர் இந்த உணர்ச்சியைப் போக்க முந்துதல் வேண்டும். நமக்கென்ன என்ற உணர்ச்சியைப் போக்குவதைப் பற்றி நமக்கென்ன என அவர் இருத்தல் ஆகாது. மற்றவர் சொந்தக்காரியங்களில் நமக்கென்ன என்றிராமை போலவே சீர்திருத்தக்காரர் என்போரும்தமக்கு ஆகவேண்டிய சில காரியங்களில் நமக்கென்ன என்றிருக்கவில்லை.

வீண் வேடத்தாலும் ஆரவாரத்தாலும் பொய்ப் பிரசாரத்தாலும் உண்மையை மறைத்து எழுதும் எழுத்தாலும் சமூகம் ஒருநாளும் முன்னேற்றமடையப்போவதில்லை. சமூகம் முன்னேற வேண்டுமானால் வாய்மையும் நேர்மையும் ஒழுங்கும் கொண்ட பலர் முன்வந்து உழைத்தல் வேண்டும், நமக்கென்ன என்ற பேச்சை—எண்ணத்தைச் சமூகத்தைவிட்டு ஓட்டுதல் வேண்டும்.

---

# நாகரிக முற்போக்காம்!



(தனவந்தர் "குரிச்சி"யில் இருக்கிறார். அவருடைய தாய் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறாள். மனைவியும் குழந்தைகளும் நின்றுகொண்டிருக்கிறார்கள்.)

தனவந்தர்:—இது என்ன வினோதம்! இந்தக் குழந்தைகள் வெள்ளைக்காரக் குழந்தைகளைப்போல உடைதரித்துக்கொண்டிருக்கின்றனவே!

தாய்:—என்ன அநியாயம்! உனது மனைவிக்குப் பித்துப்பிடித்திருக்கிறதா இவ்வாறு செய்ய?

மனைவி:—எனக்குப் பித்தில்லை. "கர்னாடகப் பிடுங்கல்" எனது குழந்தைகளுக்கும் வேண்டாம். குழந்தைகள் பள்ளிக்குச் செல்லுவதால், இந்த உடைதானே வேண்டும்? தங்களுடைய தாயைப்போல என் குழந்தைகளும் வளர வேண்டுமா? நம்முடைய குழந்தைகள் பிச்சைக்காரர்களின் குழந்தைகளைப்போல வளர வேண்டியதில்லை.

---

# காதற் கடிதங்கள்.

காதலி காதலனுக்கு எழுதியவை.

கடிதம் கச.

துந்துபிஸு புரட்டாசிமீ கஉ-௨

என் உளங் கொண்ட காதலரே!

உங்கள் நான்காம்நாட் கடிதம் பெற்றேன். என்றன் ஐந்தாம்நாட் கடிதம் கிடைத்திருக்கலாம். எனது கடிதம் உங்கள் கைப்படுமுன்னரே கம்பிச் செய்தியால் நிகழ்ச்சியறிந்து நான் எதிர்பார்த்தபடியே மகிழ்ச்சியுரை அனுப்பிவிட்டீர்கள். சமூகத் திருத்தத்தில் இம்மண நிகழ்ச்சி மிகவும் முக்கியமான தென்பதில் சிறிதும் ஐயமில்லை. ஜாதி வேற்றுமையே உருவாக இருக்கும் நமது நாட்டில்—அதினும் ஒரு கட்டாக வாழும் நமது மரபுக்கும் வேறு வகுப்புக்கும் ஒழுக்கு முறையில் சம்பந்தம் நடந்தது பெருமகிழ்ச்சிக் குரியது என்பதை எவரே மறுப்பார்.

நமது நாட்டிற்கும் மரபிற்கும் ஒழுக்கத்திற்கும் போக்கந்தரும் இச் செயலுக்குத் துணை நின்றவர் என்றும் போற்றத்தக்கவராவார். நாட்டில் இச்செயல் பரவுமானால் சாதி வேறுபாடு ஒழிந்துபட்டேவிடும். சமூகம் இதன்வழி நடக்குமானால் பெண்விலை என்ற பெரும்பேய் மாண்டுவிடும். இச்செயல் பரவினால் ஒழுக்கம் பெரிதும் நிலைபெறும். சாதிவழிமணம் தொலைந்து காதல்வழி மணம் நிகழுமேல் ஒழுக்கங்கெடும் செயல் மிகவும் குறைந்துவிடுமன்றோ? இத்தகைய பெருங் காரியத்திற்கு வழிகாட்டியமை பெரும் புண்ணியமாகும். மெய்யாக நோக்கும் பொழுது புண்ணிய காரியமென்பது இதுவே. இதனைப் பின்பற்றிப் பல மணங்கள் நடந்துவிடுமானால் இதைவிடச் சமூகத்திற்கு நலம் பயப்பது வேறு என்ன இருக்கமுடியும்?

முன்னே நம்மவர் பெண் அகப்படாதபோது வேளாளர் வகுப்பில் மணஞ்செய்து கொண்டார்கள் என்று கூறுகின்றார்கள். அது இருக்கலாம்; இல்லாதிருக்கலாம்; அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. முன்னே இருந்தாலும் இல்லாதபோனாலும் இன்று தேவையானால் செய்யவேண்டுவது தானே. அதில் வேளாள வகுப்பு என்று என்ன? வகுப்பைப் பற்றிய பேச்சு ஒழியவேண்டும். மணம் காதல் வழியே நடக்க வேண்டும். இப்பொழுது நடந்த மணம் காதல்வழியே நடந்தது என்று கூறுதற்கில்லை. அவ்வழியே நடத்த முயலல்வேண்டும். மணம் அவ்வொன்றின் வழியின்றிப் பிற எவ்வழியும் நடத்தல் ஆகாது.

இம்மணம் சாதாரணமாக நடப்பது போலவே நடந்திருக்கிறது. வேறு வகுப்பு என்பது தான் மாற்றம். ஆனால் அது பெரியதோர் மாற்றமே என்பதில் தடையில்லை. இவ்வழி ஆக்கம் பெற்றுச் செல்லுமானால் இதினின்றும் சீர்திருத்தம் இன்னும் நன்றாகத் தோன்ற இடமுண்டு. பன்னெடுநாட் பழக்கமாதலின் சட்டென்று விட்டுவிட அஞ்சுகின்றனர். அதற்கு வேண்டும் உணர்ச்சியை ஊட்டுதல் வேண்டும். சிறு சிறு காரியங்களில்கூட சீர்திருத்தம் செய்ய எவ்வளவோ முயல வேண்டியிருக்கும்பொழுது இப்பெருங் காரியம் எளிதில் முடியக்கூடியதல்ல. இதற்குப் பெருமுயற்சி வேண்டும் என்று இயம்ப வேண்டுவதில்லை. இதில் ஊழியர் சங்கத்தார் முயற்சி பெரிதும் பாராட்டத்தக்கது. பலர் பின்பற்ற முன் வந்து விடுவாரானால் அவர்கட்குப் பெருங்களிப்பாக இருக்கும். இன்று ஒருகால் ஒல்லுமாறு நடைபெறுது போனாலும் என்றேனும் இக்கொள்கை நிறைவேறத் திருவருள் துணை செய்யும் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு. இஞ்ஞான்று இக்கொள்கையை உயிராகக் கொண்ட நீங்கள் இங்கின்மை வருந்தத்தக்கது. அது பற்றி விரிக்கின் உங்கள் உளம் மிகப்புண்பட்டுவிடுமாதலின் வேண்டாம். பிறபின்னர்.

உங்கள், உண்மைக்காதலி

.................................

---

நாள் ஒன்றுக்கு எட்டுக் கோடி நட்சத்திரங்கள் (மீடியர்கள்) பூமியில் விழுகின்றனவாம்.

* * *

மொராக்கோ சுல்தான் பிரான்ஸில் ஒரு விருந்துக்குச் சென்றிருந்த போழ்து, பிரஞ்சுப் பெண்மணிகளின்காட்டியத்தைக்கண்டு அருவருப்புடன் "மேல்நாட்டு மனிதர் எப்படித் தங்கள் மனைவிகளையும் பெண்களையும் இம் மிகப் புதிய நோகாட்டியங்களைச் செய்ய அனுமதிக்கின்றனர்?" என்று விருந்தாளிகளிடம் கூறினாராம். அவர்கள் தங்கள் மனைவி பெண்களுடனா ஆடிக் களிக்கின்றனர்? பிறர் மனைவி பெண்களுடனன்றோ?

## சிறுவர் பகுதி.

"தாத்தா! கதை" என்றாள் உமை. அதை ஆதரித்து, முருகனும் தலையை அசைத்தான். ஆதிபுராணரோ, தமது தலையை வேறுவிதமாக அசைத்தார். உமையின் முகம் வெளுத்துப்போயிற்று. முருகன் முகவாட்டமடைந்தான். இதைப் பாட்டனார் மிக்க கவனத்துடன் பார்த்து வந்தார். "எதற்காகக் கதை வேண்டும்? பொழுதுபோக்குக்காகவா? இது வரையிலும் நான் எத்தனையோ கதைகள் சொல்லியிருக்கிறேன். அவைகளினால் நீங்கள் அடைந்த பயன் என்ன? அதை முதலிலே நீங்கள் சொல்லுங்கள்" என்று அன்புகொண்டு, குழந்தைகளைப் பாட்டனார் வினவினார்.

உமை சொல்லுகிறாள்:—"தாத்தா? என்ன பயன் என்று நாங்கள் எவ்வாறு சொல்லக்கூடும்? நாங்கள் இப்பொழுது கடந்துகொண்டுவரும் வகையைப் பார்த்து, நீங்கள்தான் அதைப்பற்றி நிதானித்துக் கொள்ளவேண்டும். கதைகளைக் கேட்கக் கேட்க, எனக்கு உற்சாகம் உண்டாகின்றது. கதைகளிலே வரும் வீரர்களைப் போல, நானும் நடக்கவேண்டும் என்ற எண்ணம் என்னுடைய மனதில் பல தடவைகளிலும் தோன்றியிருக்கிறது. அற்ப காரியங்களைச் செய்யலாகாது என்ற உணர்ச்சி உண்டாகின்றது. தவிர, நீங்கள் கதை சொல்லும் விதம் நன்றாகவிருக்கிறது."

"எதற்கும் உமை முந்திக்கொண்டு விடுகிறாள். முருகா! உன் சங்கதி என்ன" என்றார் ஆதிபுராணர்.

முருகன் சிறிது நேரம் வரையில் திகைத்துப்போனான். "உமை சொன்னது அவ்வளவும் உண்மைதான். பொழுதுபோக்குக்காகக் கதை கேட்பதும் சொல்லுவதும் கூடாது என்று நான் ஒப்புக்கொள்ளுகிறேன். உங்களுடைய கதைகளைக் கேட்கத்துவக்கிய நாள் முதல், என் உடம்பில் புதிதான கலக்கம் ஒன்று உண்டாயிருக்கிறது. சில இரவுகளில் எனக்கு நேரே தூக்கம் வரவில்லை. கதைகளில் கூறப்படும் பெரியார்கள், இந்த உலகத்தில் பிறந்து, வீரத்தையும் நன்னெறியையும் கொண்ட காரியங்களையும் செய்திருப்பார்களானால், அவ்வாறு என்னால் செய்யமுடியாதா என்ற எண்ணம் அடிக்கடி எனக்குத் தோன்றுவதுண்டு. நீங்கள் கதை சொல்லும்பொழுது, வேறு உலகத்தில் நாம் அனைவரும் இருப்பதாக எண்ணம் தோன்றும். கதையை முடித்ததும், சந்தோஷம் உண்டாகும். நானும் வீரனாக ஆகலாம், ஆகவேண்டும் என்ற உணர்ச்சி எனக்கு உண்டாயிருக்கிறது" என்றான்.

ஆதிபுராணருக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. கதைகள் வீணாகப்போகவில்லை என்று எண்ணிக்கொண்டார். குழந்தைகளாயினும், இவர்கள் இவ்வாறு பேசியது அவருக்கு வியப்புண்டாயிற்று. ஆனால் அவர்கள் பேசியது கதையின் பயன் என்று முடித்துக்கொண்டார். ஆனந்தயாத்தை முகத்திற்கொண்ட ஆதிபுராணரும் புன்னகை பூத்தார்.

பாட்டனார் கூறுகின்றார்:—"கதையைக் கதையாகவும் கற்பனையாகவும் கொள்ளக் கூடாது. உத்தமர்கள் உத்தமர்களாக இந்த உலகத்தில் கருமம் செய்தது பழைய வினையால் அல்ல. அவர்களுடைய இளம்பிராயத்தில், அவர்கள் தாய்மார்களிடமிருந்தும் ஏனையோர்களிடமிருந்தும் நல்லகதைகளைக் கேட்டிருக்கிறார்கள். சிவாஜி மகாராஜா எவ்வாறு பராக்கிரமசாலியாக ஆனார்? ராமாயண, மகாபாரதக் கதைகளைக் குழந்தைப் பருவத்தில் கேட்டார். சாலிவாகனன் தென்னாடு முழுமையும் ஜயித்து, வடநாட்டிலும் கீர்த்தி பெற்று விளங்கியது எதனாலே? சிறு பிராயத்தில் கதைகளைக் கேட்டு மண்ணால் சேனைகளைச்செய்து விளையாடினான். "தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்". ஆகையால், உங்களுடைய இந்தப் பருவத்தில், நீங்கள் உங்களைத் திருத்திக் கொள்ளவேண்டும். இனிக் கதையைச் தொடர்ச்சியாகச் சொல்லுகிறேன். இன்று வேண்டாம்."

---

## முன்னும் பின்னும்.

"கடவுளால் முடியாதது ஒன்றுண்டோ" என்று பலர் சொல்லுகிறார்கள். ஊன்றிப் பார்க்காதவர்களுக்கு இந்தச் சொற்கள் பக்தனுடைய வார்த்தைகள், ஆஸ்திகனுடைய எண்ணங்கள் என்று தோன்றும். மேற்சொல்லிய சொற்களை எந்நேரமும் வாய் சலிக்காமல் சொல்லுபவர்கள் வீணர்கள், சோம்பேறிகள், பயங்கொள்ளிகள், நரம்பு தளர்ந்தவர்கள், ஆஷாடபூதிகள் என்பது தெளிவாக விளங்கும்.

ஃ ஃ ஃ

கடவுளால் முடியாதது ஒன்று உண்டா என்று இவர்கள் கூறும்பொழுதே, மனிதன் செய்யவேண்டியது ஒன்றுமேயில்லை என்று பொருள்படும்படி உரையாடுகின்றனர். இவர்களுடைய திக்கற்ற தன்மையை தாங்களே வருவித்துக்கொண்டார்கள் என்று எண்ணாமல், கடவுளிடம் எல்லையற்ற பக்திகொண்டவர்களைப் போலப் பேசுவது வியப்பேயாகும். வெண்ணெயை வைத்துக் கொண்டு, நெய்க்கு அழுபவர்கள் உலகத்தில் எவரையேனும் காணமுடியுமா?

ஃ ஃ ஃ

கடவுளால் முடியாதது ஒன்றுமேயில்லையா என ஒருவர் கேட்கின், ஒன்று மட்டும் உண்டு என்று கூறலாம் எனத் தோன்றுகின்றது. சோம்பல்கொண்ட அடிமையின் கோணல் அறிவையும் உணர்ச்சியையும் திருத்தியமைக்கக் கடவுளாலும் முடியாதோ எனச் சந்தேகிக்கலாம். கருமத்துக்கு பலனும் உழைப்புக்குக் கூலியும் இல்லையாயின், மனித குலத்துக்கு ஒரு நாளும் உய்வு இருக்காது.

ஃ ஃ ஃ

தாயினிடம் குழந்தைக்கு இருக்கும் நம்பிக்கைக்கும் கடவுளால் முடியாதது ஒன்றுண்டா என்று சதா உளறிக்கொண்டிருக்கும் வம்பர்கள் கூற்றுக்கும் வேற்றுமையில்லையா? அம்மா என்ற சொல் குழந்தையின் உயிர்ச் சாறு. நமது ஆஷாடபூதிகளின் சொற்கள் வீணர்களின் உளறல்களாகும். குழந்தை தாயுடன் ஒட்டிக்கொள்ளுகின்றது. ஆஷாடபூதி அடிமையோ, தனது கருமத்திலும் நினைப்பிலும் கடவுளை எய்க்கின்றான். தனது கெட்ட கருமங்களின் மூலமாய், சக்திக்கு ஆதாரமாயுள்ள உடலையும் உயிரையும் தேய்த்து, மாய்த்துக்கொள்ளுகிறான்.

ஃ ஃ ஃ

கடவுளால் முடியாதது ஒன்றுண்டா என்ற சொற்களினால், நமக்கு தைரியமல்லவா பிறக்கவேண்டும்? மனதில் உறுதி நிலைக்கவேண்டும். நமது உழைப்பு அதிகரிக்க வேண்டும். நமது அடக்கம் பெருக வேண்டும். கடவுளைப்பற்றிப் பேசும் அடிமையிடம் இவையாவும் அல்லது ஒன்றேனும் காணக்கிடக்கின்றதா? இறுமாப்புக் கொண்ட முதலாளி கல்வி நிறைந்த புலவரை உபசரிப்பது போல, இவர்கள் கடவுளின் பெருமையைப்பற்றி, நா அசைக்கின்றனர்.

ஃ ஃ ஃ

தன் காதலியை இழுத்துச்செல்லும் தீயோனை யைப் புடைக்க வல்லமையைத் தாங்காமல், போலீஸ் உதவிக்கு விரைந்து செல்லும் பேடிதான், "கடவுளால் ஆகாதது ஒன்றுண்டோ" என்று வாய்கிழிய, பொய்வேதாந்தம் பேசுவான். கடவுளால் ஆகாதது ஒன்றுண்டா என்று புலம்பிக் கொண்டிருந்தால், "ஆமாம்; நீ சொல்லுவது உண்மைதான்," என்று முத்திரை வைத்துவிட்டு, துர்ச்சனன் இளங்கொடியை இன்னும் வேகமாக அழைத்துச் சொல்லுவான்.

ஃ ஃ ஃ

கடவுளின் பக்தன் எனப் பாவனை பேசிக் கொள்ளும் தனது கணவனைப்பற்றி, காதல் இளங்கொடி என்ன நினைத்துக்கொள்ளுவாள்? கடவுளை நம்பியும் அல்லது அவர் திருநாமத்தைச் சொல்லியும், தைரியத்தைக் கொள்ளாமல், தன்னைப் பறிகொடுத்து அலமலர்ந்து நிற்கும் கணவனைக்காட்டிலும், தன் பேரில் அசுரத் தன்மை கொண்ட ஆசையைச் செலுத்தும் ஆடவனே உயர்ந்தவன் என்று எண்ணினால், மனுநீதி முழுமையும் துண்டு துண்டாகக் கிழிந்து, கடலில் போய்ச் சேர்ந்துவிடுமா? அல்லது நரகம் அவளை விழுங்கிவிடக் காத்துக்கொண்டிருக்குமா? அவளுக்குத் தனிச்சடமை உண்டு. அதைப்பற்றி இப்பொழுது பேச்சில்லை.

தத்துவம் வாழ்வுக்கு இன்றியமையாததுதான். ஆனால் எத்தகைய தத்துவம்வேண்டும்? உயிரைக் கொடுக்கும், உயிரை வளர்க்கும், பிறர் நலத்துக்கு உயிரையும்கொடுக்கத் தூண்டும் தத்துவம் ஒன்றே உண்மை கொண்டதாகும். ஏனையவைகள் தத்துவமாக உருவம் படைத்திருக்கலாம். ஆனால் அவைகளினால் 'சாரம்' இல்லை. வாதுக்கும் வம்புக்கும் தத்துவம் இப்பொழுது உபயோகப்பட்டு வருகிறதல்லாமல் நல்ல வாழ்வுக்காக, தத்துவம் இப்பொழுது உபயோகப்பட்டுவரவில்லை.

ஃ ஃ ஃ

நெருப்பில் வாட்டிய கழியை எவ்வாறு திருத்தியமைக்க எண்ணங் கொண்டாலும், திருத்தியமைக்கலாம். உழுது செப்பனிடப்பட்ட கழனியில் எதுவும் பயிராகும். நல்லபதத்தில் இருக்கும் பொன்னைத்தட்டி, எந்த உருவத்தையும் வரச் செய்யலாம். அதுபோல, எத்தகைய செயலுக்கும் சொல்லுக்கும் அதற்கு ஏற்றவாறு பதனடைந்த உள்ளம் வேண்டும். துகில் உரிந்த காலத்தில் பாஞ்சாலியின் உள்ளம் எவ்வாறு இருந்திருக்கும்? அத்தகைய உள்ளத்தையா மேற்கூறிய நமது ஆஷாடபூதிகள் படைத்து நிற்கின்றார்கள்? கற்பனைக்கண்களைச் சற்றுத்திறந்து பாருங்கள்.

ஃ ஃ ஃ

எட்டும் இரண்டும் பத்து என்பது உண்மை. இதை நம்மில் எவரும் ஆட்சேபிப்பதில்லை. மனமும் சாசுவதமான சில விதிகளுக்கு இணங்க, சலிக்கின்றது. அடுப்பிலிருந்து வெளியே எடுக்கப்பெறும் கட்டையில் தீ அதிகமிருப்பதில்லை. அவ்வண்ணமே, உள்ளத்திலிருந்து சொல்லுருவாய் வெளியே தோன்றும் உணர்ச்சியைக்காட்டிலும், உள்ளத்தில் புகைந்து குமுறும் எண்ணங்களுக்கும் உணர்ச்சிக்கும் அதிகமான வல்லமை உண்டு. பிறரை எய்ப்பதாக எண்ணி, மறைத்து வைத்திருக்கும் உணர்ச்சியின் வேகம் பத்துக்காத தூரம் அடிக்கும். மறைப்பது முடியாது. மறைப்பதாகக்கருதுபவர்கள் ஏமாற்றமடைவார்கள்.

ஃ ஃ ஃ

பள்ளங்கண்ட இடத்தில் நீர் தேங்கி நிற்கும். கடவுள் பதம் கொண்ட உள்ளத்தில் அமர்ந்து, அதை நடத்துகின்றார். உள்ளம் பதனடையாதவரையிலும், அதைக் கடவுள் கடைக்கண்ணால் கூட எட்டிப்பார்ப்பதில்லை. தஞ்சை ஜில்லா விவசாயி, வடநாட்டில் ஓடும் கங்கையின் நீரை நம்பிப்பயிர் செய்வதில்லை. கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறார். என்றாலும் தன் உள்ளத்தில் கோயில் கொண்டிருக்கும் கடவுளை நம்பித்தான், எவரும் கருமம் செய்ய வேண்டும். கைப்பணம் அவசரச் செலவுக்கு உதவுமேயல்லாமல், கடன் வாங்கும் ரொக்கக்கடைப்பணம் உதவாது.

ஃ ஃ ஃ

கடவுளுக்கு நம்மைக்காக்கும் தொழில் இருக்குமானால், அவர் கடமையை அவர் செலுத்துவார் என்பதில் ஐயமில்லை. கடவுளின் கடமையைக் கடவுளுக்குச் சுட்டிக்காட்ட வேண்டிய நிலைமைக்குக் கடவுள் வந்து விட்டால், அத்தகைய 'சோம்பல்' கடவுளால், கவலையில்லாக்கடவுளால், உயிர்க்குலத்துக்கு யாதொரு பயனுமில்லை. கடவுள் நம்மைக்காப்பது உறுதி. ஆனால் நம்மை நாமே காப்பாற்றிக்கொள்ள முயன்றால் அன்றி, கடவுள் நம்மைக் காப்பது அருமை. "கூலியும் கொடுத்து நெல் குத்துவதில் எதிர்மூச்சு உலக்கையும் போடுவது" கடவுளின் வழக்கமல்ல. அதை மனிதர்கள் நன்கு உணர வேண்டும். நன்மைக்கும் தீமைக்கும் கடவுள் மனிதனுக்கு சக்தி அளித்திருக்கின்றார்.

ஃ ஃ ஃ

ஆராய்ச்சியாளர்களும், மனிதனுக்கு அளிக்கப்பெற்றிருக்கும் எல்லையற்ற சக்தியைச் சிறிது சிறிதாகக் கண்டுபிடித்துவருகின்றார்கள். காரண காரியவிதிக்கு இணங்க, இயற்கை இயங்குகின்றது என்ற உண்மையை உலகத்தாருக்கு அவர்கள் உபதேசம் செய்துவருகிறார்கள். அத்தகைய உண்மையை மனத்திற்கொண்டு, வினையாற்ற முற்படாமல், சோம்பிக் கிடக்கும் மாந்தர்கள் மனிதர்களுக்குள் பதர்கள் என்று அழைக்கப்பெறுவது உறுதி.

---

## மகளிர்கோட்டம்.

மீனாட்சியும் அவளது தோழிமார்களும் கூடிக் கொண்டார்கள். மீனாட்சி பேசத் துவக்கினாள். "உங்களுக்குச் சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். கேட்கின்றீர்களா" வென்றாள். தோழிகளில் ஒருவள், "நமது சங்கம் எச்சுக்கும் எளனத்துக்கும் பேச்சாகிவிட்டது. பெண் பிள்ளைகள் கூட நம்மை வெறித்துப்பார்க்க ஆரம்பித்திருக்கிறார்கள். இவர்களும் இவ்வாறு செய்யலாமா என்று எனது உள்ளம் பதறுகின்றது. நேற்றைக்குக் குழம்பில் உப்பு இல்லை. சங்கத்துக்குப் போகிறவர்களுக்குச் சரியாகச்சமைக்க நேரமும் மனமும் இருக்குமா என்று என் புருஷன் கோபித்துக் கொண்டார்" என்றாள். "ஒருநாளைக்குச் சமையல் சரியாயில்லாவிட்டாலும், எதையாவது மனதிற் கொண்டு, புருஷர்கள் திட்டுவது வழக்கம். அதைப்பற்றி அதிகமாகப் பேசத்தேவையில்லை" என்றாள் இன்னொருவள்.

மீனாட்சி சொன்னாள்:—"அதிருஷ்டமோ, காலமோ, எனது நல்ல எண்ணமோ, அது எனக்குத் தெரியாது. நீங்கள் குறிப்பிடும் தொல்லை எனக்கு நேர்ந்ததில்லை. நான் செய்வது யாவையும் நான் என் புருஷனிடம் சொல்லிவிடுகிறேன். அவர் கோபிப்பதில்லை. சங்கம் உண்டாக்கியதையும் அவரிடம் சொன்னேன், சரியென்றார். அவருக்குப் புத்தியில்லையா"

"அது உன் பாக்கியம்" என்றாள் ஒரு தோழி. மீனாட்சி, "அதிருஷ்டம் என்று நான் மரியாதைக்காகச் சொன்னேன். அது அதிருஷ்டமல்ல. நான் ஒரு பொழுதும் என் உள்ளத்தை என் புருஷனிடமிருந்து மறைத்ததில்லை. ஆகையால் நான் செய்யும் எந்தக் காரியத்திலும் அவருக்குச் சந்தேகம் உண்டானதில்லை. நான் செய்யத்தீர்மானிக்கும் ஒவ்வொரு காரியத்துக்கும், அவரை நான் யோசனை கேட்பேன். அவரும் தமது மனதை ஒளிக்காமல் என்னிடம் பேசுவார். எனவே, எங்களிருவருக்குள்ளும் மனத்தாங்கல் உண்டானதில்லை. இவ்வாறு ஒவ்வொரு பெண் பிள்ளையும் செய்தால், குடும்பத்தில் ஏற்படும் சச்சரவும் கவலையும் வேற்றுமையும் ஒழிந்துபோய்விடும் என்று எனக்குத் தோன்றுகின்றது. சச்சரவு ஒழிந்தால், ஸ்திரீகள் தங்கள் முன்னேற்றத்துக்கானவழிகளை எளிதிலே நாடலாம்" என்றாள்.

"நீ எளிதிலே சொல்லி முடித்துவிட்டாய். உண்மையைப் பேசினால் ஆண் பிள்ளைகள் அதை உடனே ஏற்றுக்கொண்டு விடுகிறார்களா? நம்மை அதிகாரம் பண்ண ஆசை கொண்டிருக்கும் ஆண் பிள்ளைகளுக்கு நம்முடைய உண்மை இனிப்பதில்லை. அவர்களுக்கு நம்முடைய கீழ்ப்படிதல் மட்டும் இனிக்கும். பார்த்துப்பார்த்து, இதை நான் தெளிந்து கொண்டுவிட்டேன். மீனாட்சி சொல்லுவது எல்லா வீடுகளிலும் அவ்வளவு சாத்தியமான சங்கதியல்ல" என்றாள் மற்றொரு தோழி.

"நீ சொல்லுவது ஒருவாறு உண்மை. நீண்ட காலமாக அதிகாரம் செய்து பழகி வந்த ஆண்பிள்ளைகள் பெண் விடுதலையை விரும்புவதில்லை. பெண்களுக்குச் சுதந்திரம் வேண்டும் என்று நாம் ஏன் சொல்லுகிறோம்? ஆண் பிள்ளைகளுடன் போட்டி போட்டு, அவர்களுடைய ஆதிக்கத்தைக் குலைக்கவா? உலர்ந்த மண்ணும் சுட்ட கல்லும் ஒட்டிக் கொள்ளுவதில்லை. பலவீனனுக்கும் வீரனுக்குமிடையே நட்பு இருக்க முடியாது. குடும்பம் இனிது நடக்க வேண்டுமானால், கணவனும் மனைவியும் சுதந்திரம் பெற்று வாழ வேண்டும். ஆட்டுக்கும் கோனனுக்கும் சினேகிதம்உண்டா? ஆடு ஆடாக விருக்குமாவும், அதைக் கோனன் மதிக்கமாட்டான். ஆட்டுக்கு அறிவு ஏற்படாவிடின், கோனன் பாடு கஷ்டம் தான். எனவே ஆட்டைப்போல வாழ்ந்து வரும் பெண் பிள்ளை அறிவு பெற்று, சுதந்திரம் அடைந்தாலொழிய, ஆண் பிள்ளைகளின் தொல்லை தீராது" என்றாள் மீனாட்சி.

---



## மணிவாசக சங்கம்.

(சொக்கலிங்கம் புத்தூர்)

நிகழும் அட்சய ஆண்டு புரட்டாசித் திங்கள் இரண்டாம் நாள் சனிக்கிழமை பிற்பகல் நான்கு மணிக்கு மேளவாத்தியங்களுடன் திருசிரபுரம் நாஷனல் காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர் ப்ரும்மஸ்ரீ ம. கோபாலகிருஷ்ணய்யரவர்களை (தலைவர்) ப்பூமாலை சூட்டி வீ. மு. அன்ன சத்திரத்திற்கு அழைத்துவர, அவர்கள் தலைமையில் மணிவாசக மாணவர் சங்கத்தின் இரண்டாவதாண்டு நிறைவுவிழாக் கொண்டாட்டம் ஆரம்பமாகியது அஞ்ஞான்று ஸ்ரீ மாணிக்கவாசக வித்தியாசாலைத் தலைமைத் தமிழாசிரியர் ப்ரும்ம ஸ்ரீ செ. இராமமூர்த்தி ஐயரவர்கள் வந்தனோபசாரப்பத்திரம் வாசித்தபின் ஷை வித்தியாசாலை மாணவர்கள் கடவுள் வாழ்த்துக்கூறத் தலைவரவர்களின் முன்னுரையின்பின், திருவாளர்களான ந. சுப்பராயர் வறுமையிற் செம்மை என்பதையும், சொ. மீனாட்சிசுந்தரம் விருந்தோம்பல் என்பதையும் முரு. முத்தையா, ந. சுப்பராயர் என்ற இரு மாணவர்கள் ஆங்கிலத்தில் ஒரு சம்பாஷணையையும், கோநகர் சு. முரு. பழநியப்ப செட்டியார் மனிதப் பிறப்பும் ஈசுவரபக்தியும் என்றதையும் அழகுறப் பேசினார்கள், இடை இடையே இன்னிசைக் கருவிகளுடன் தேவார திருவாசகாதி அருட்பாக்கள் ஓதப்பெற்று முதல்நாட் பிரசங்கம் நிறைவெய்தியது.

மூன்றாம் நாள் ஞாயிற்றுக்கிழமை முற்பகல் ஒன்பது மணிக்கு கோநகர் கற்பக விநாயக கலாசாலை மாணவர்களாகிய முத்து வேங்கடாசலம், சிதம்பரசுவாமி என்ற இருவர்களால் கடவுள் வாழ்த்துக் கூறியபின் திருவாளர்களான ராம. சத்தியமூர்த்தி பக்தி என்பதையும், ராம. அரங்கிருஷ்ணன் இன்சொல் என்பதையும், சு. வீர. சு. வீரப்பன் வேள் பேகன் சரித்திரத்தையும், மூ. அருணகிரி சூது என்பதையும் மாணிக்கவாசக வித்தியாசாலை ஆங்கில ஆசிரியர் ப்ரும்ம ஸ்ரீ குருசாமி ஐயரவர்கள் ஓங்காரத்தின் பெருமை என்பதையும், ஆ. முத்துப்பட்டினம் திரு. ராம. அள. அருணாசலம் செட்டியார் பத்திரிகையாலாயபயன் என்பதையும் உபந்யாசம்செய்தார்கள். பிற்பகலில் நான்குமணிக்கு கொத்தமங்கலம் திருவாளர்களான ராம. சுப்பிரமணியன் செட்டியார் கல்வி என்பதையும், காரைக்குடி ஆவி. லெ. அருணாசலம் செட்டியார் வீரமும் பெண்களும் என்பதையும், ஷை யூர் குமரன் உதவி ஆசிரியர் ஸ்ரீநிவாச ஆச்சாரியார் இராம இராவண ராஜ்யம் என்பதையும், ஷை யூர் அரு. சோமசுந்தரஞ் செட்டியார் பாரதியார் பாடலைப்பற்றியும், கோநகர் கற்பக விநாயக கலாசாலைத் தலைமைத்தமிழாசிரியர் எஸ். ஆழ்வாரய்யங்காரவர்கள் காவியரசம் என்பதையும் சொற்பொழிவு செய்தார்கள். பின்னர் தலைவரவர்கள் முடிவுரை கூறியபின்வந்தனோபசாரம் பகரப்பெற்று இடை இடையே தேவார திருவாசகாதி அருட்பாக்களுடனும் கடவுள் வாழ்த்துக்கூறப் பெற்றுச் சந்தனம் தாம்பூலம் கற்கண்டு வழங்கியபின் மங்களகரமாகச் சபை ஒன்பதுமணிக்கு இனிது நிறைவெய்தியது

---

## பொதுக் கூட்டம்.

(தேவகோட்டை)

அட்சயஹு புரட்டாசிமீ சஉ (உ௦-கூ-உக) திங்கட்கிழமை மாலை ரு மணிக்கு தேவகோட்டையில் திண்ணப்ப செட்டியார் ஊரணிக்கு வடபுறத்திலுள்ள காந்தி சவுக்கில் இவ்வூர் மகாநாடு கூடிற்று. அம்மகாநாட்டில் திருவாளர் பவ. லெ. லெட்சுமணன் செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள்.

க. தேவகோட்டை யூனியன்போர்டு தாலுக்கா போர்டுகளில் தொழில்வரி விதிப்பதில் உச்சவீத நிர்ணயத்தைக் கையாளப் பட்டுவருகிறது. இதனால்பொதுமக்கள் தாங்கமுடியாத வரிச்சுமைக்கு ஆளாகிறார்கள். சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி வீத நிர்ணயத்தை மாற்றச் சட்டத்திலிடமிருந்தும் இவ்விரு சபை அங்கத்தவர்களும் இதுபற்றி வாளாவிருந்துவிட்டது பற்றி இம்மகாநாடு வருந்துவதுடன் தொழில்வரி உச்சவீத நிர்ணயம் இப்போது ஒருவருடத்திற்கு உஉ௦ வீதமிருப்பதிலிருந்து ரு௦ வீதத்திற்கு நிர்ணயிக்குமாறு தாலுக்கா போர்டாரையும் யூனியன் போர்டாரையும் இம்மகாநாடு வேண்டிக்கொள்கிறது என திருவாளர் மொ. பெரி. வெ. வெ. அருணாசலச் செட்டியாரவர்களால் பிரரேபிக்கப்பெற்று, அழ. லெட்சுமணன் செட்டியாரவர்களால் ஆமோதிக்கப்பெற்று ஏகமனதாய் நிறைவேறியது.

உ. இந்நகர வீட்டு வரி விதிப்பை ஜில்லா போர்டார் அதிகப்படுத்தி உத்தரவு பிறப்பித்திருப்பதுபற்றி இம்மகாநாடு வருத்துவதுடன் ஜில்லா போர்டார் புனராலோசனை செய்து சென்ற வருஷத்திய வரிவிதிப்பையே ஸ்திரப்படுத்துமாறு இம்மகாநாடு வேண்டிக்கொள்கிறது என திருவாளர் சுப. அருணாசலம் செட்டியாரவர்களால் பிரரேபிக்கப்பெற்று, திருவாளர் [illegible] ஆமோதிக்கப்பெற்று ஏகமனதுடன் நிறைவேறியது.

ரு. பொதுஜன விருப்பத்திற்கு மாறாக தேவகோட்டை தாலுக்கா [illegible] யேக் குறித்துக்கொண்டு, தாலுக்கா [illegible] தலைவர் பதவி அரசாங்கத்தாரால் [illegible] மாய்ப் பூர்த்திசெய்யப்பட்டதை இம்மகாநாடு அழுத்தமாய்க் கண்டிக்கிறது.

ரு. ஸ்தலஸ்தாபன நிர்வாகத்தில் நாடு முன்னேறி [illegible] தாலுக்கா போர்டு தலைவரைத்தேர்ந்தெடுக்கும் உரிமை தேவகோட்டைக்கு அரசாங்கத்தாரால் (இப்போது) வழங்கப்படாமலிருப்பது பற்றி இம்மகாநாடு வருந்துகிறதெனவும், மேல்கண்ட எல்லாத் தீர்மானங்களையும் சம்மந்தப்பட்ட போர்டுகளுக்கும் ஸ்தல ஸ்தாபன மந்திரிக்கும் அனுப்பிவைக்கவேண்டுமெனவும் திருவாளர் மு. சு. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்களால் பிரரேபிக்கப்பெற்று, திருவாளர் கரு. கதி. நாச்சியப்ப செட்டியாரவர்களால் ஆமோதிக்கப்பெற்று ஏகமனதாய் நிறைவேறியது.

---

## தந்தி.

(ஊழியனுக்காக வந்ததந்தி.)

பினங்கு அட்சய புரட்டாதிமீ கக௳

உண்டியல்விலை நூற்றைம்பத்துநான்கு

ஈயம் விலை நூற்றைம்பத்துமூன்று

ரப்பர் விலை தொண்ணூற்றுநான்கு

ரங்கூன் அட்சய புரட்டாதிமீ கக௳

| | |
|---|---|
| நடப்புவட்டி | ௦-அ-௦ |
| தவணை வட்டி | ௦-எ-ரு |
| பவுன் | கரு-கூ-௦ |
| மீடான் " | ௫அ௦-௦-௦ |
| என். க்யூ | ௫ரு௦-௦-௦ |
| புழுங்கல் மில்சார் அரிசி | ரு௦௫-௦-௦ |
| நசேர் " | ௫ச௦-௦-௦ |
| ஏ ஒன் குருணை | ௫ச௫-௦-௦ |
| பி. ஒன் " | ௫உ௫-௦-௦ |
| சி. ஒன் | சஎ௫, சஅ௫-௦-௦ |
| காசுக்கட்டி | ககஉ-அ-௦ |
| மிளகாய் | கக௫-௦-௦ |
| கொத்தமல்லி | ௫கூ-௦-௦ |
| புளி | உகூ-௦-௦ |
| கொள்ளு | கூ௫௦-௦-௦ |
| திப்பிலி | ச௦௦-௦-௦ |
| காராமணி | கூஉ௫-௦-௦ |
| படகு நெல் | உஉ௫-௦-௦ |
| ரயில் நெல் | உக௫-௦-௦ |
| ஸ்பெஷல் நெல் | சகூ௫-௦-௦ |
| சிறியமில் அரிசி | ௫ச௦-௦-௦ |
| உளுந்து | ௫ச௦, ௫ரு௦-௦-௦ |
| தட்டைப்பயறு | ௫௦௫, ௫க௫-௦-௦ |
| மொச்சை | ருகூ௦-௦-௦ |
| கடலை | ச௦௦-௦-௦ |
| சிகப்பு பீனிஸ் | கூ௦௫-௦-௦ |
| வெள்ளை பீனிஸ் | உஅ௫-௦-௦ |

---

## கப்பல்.

"எதியோபியா" கப்பல் நேற்று சென்னை வந்து சேர்ந்திருக்கும். திரும்பி இம்மதி ௬ம் நாள் வெள்ளியன்று ரெங்கூனுக்குத் திரும்பும்.

"டெய்ரியா"க் கப்பல் இம்மதி கூ-ம் நாள் புதனன்று சென்னை வந்து சேருகிறது. திரும்பி நாளிதுமீ க௫-ம் நாள் வெள்ளியன்று பினங்குக்குத் திரும்புகிறது.

"[illegible]"க் கப்பல் நாளிது புரட்டாதித் திங்கள் ககூ-ம் நாள் சனிக்கிழமையன்று மலாய் நாட்டிலிருந்து சென்னைவந்து சேருகிறது. மறுபடி இம்மதி உ௦-ம் நாள் புதனன்று சென்னையிலிருந்து புறப்பட்டு நாகபட்டணம் வந்து அங்கிருந்து புரட்டாதித் திங்கள் உச-ம் நாள் ஞாயிறன்று மலாய் நாட்டிற்குப் புறப்படுகிறது. ஞாயிறன்று காலையிலே பிரயாணிகள் கப்பலில் ஏறிவிடவேண்டுமென நாகபட்டணம் கப்பல் ஏஜண்டு அறிவிக்கிறார்.

---

## உள்ளூர்.

(நமது நிருபரிடமிருந்து.)

| | |
|---|---|
| சென்னை நடப்பு வட்டி | க—௬—௦ |
| ரெங்கூன் நடப்பு வட்டி | க—௦—௦ |
| பவுன் (பொற்காசு) | கரு—அ—ரு |
| வெள்ளி ரூபாயிடை | ௦—க௦—ரு |

நாளது மீ கஅ-௳ திங்கட்கிழமை ஹிந்து மதாபிமான சங்கத்தின் ஒன்பதாவதாண்டு விழா சென்னை, நவசக்தி ஆசிரியர், திரு. வி. கல்யாணசுந்திர முதலியாரவர்கள் தலைமையில் நடைபெறும். அதுகாலை பல அறிஞர்கள உபநியாசங்களும் நிகழும் என காரியதரிசி அறிவிக்கிறார்.

---

### காந்தி பெண்பாடசாலை திறப்புவிழா

நிகழும் அக்ஷய ஆண்டு புரட்டாதித் திங்கள் பதினேழாம் நாள் (கூ—க௦—உக) ஞாயிற்றுக்கிழமையன்று காலை பத்து மணிக்கு அமராவதி புதூரில் நமது கல்விக்கழகச் சார்பில் காந்தி பெண்பாடசாலை என்ற பெயருடன் சென்னை "நவசக்தி" ஆசிரியர் திருவாளர் திரு. வி. கல்யாண சுந்திர முதலியாரவர்களால் ஒரு பெண்பாடசாலை திறக்கப்பெறுகிறது. அது சமயம் சில அறிஞர்களின் பிரசங்கம்நடைபெறும். அன்பர்களின் வரவை எதிர்பார்க்கிறோம் என்று காரியதரிசி திரு. மு. காசிவிஸ்வநாதன் அறிவிக்கிறார்.

---

வறுமை எதையும் செய்யத்தூண்டும்போலும்! டெப்ரெஸினில் ஒரு ஸ்த்ரீ அழுதகண்ணுடன் தன் மூன்று குழந்தைகளைச் சந்தை இடத்தில் விற்கவந்தாளாம். கச வயதுடைய மூத்தபெண்ணுக்கு ௫௦ ஷில்லிங்கும், இரண்டாவது குழந்தைக்கு கஎ ஷில்லிங்கும் பெற்று விற்றுவிட்டு, மூன்றாவதான சிறு குழந்தையை மட்டில் திரும்பக் கொண்டு சென்றாளாம். விற்றதன் காரணம் வறுமையாம்.

* *

சாஸ்திர அறிஞர் உலகத்திற்குப் பனியுகம் நெருங்கிவிட்டதாகக் கூறுகின்றனர். கக௨எம் ஆண்டிற்குப் பிறகு வட துருவத்திலுள்ள சீதளப் பிரதேசத்தைச் சூழ்ந்துள்ளபனி இன்னும் பரவிவிடுமாம்; கோடை குறையுமாம்; சூரியனது சக்தி குறையுமாம்; காலங்கள் மாறிவிடுமாம். ஆகவே இனிக்கோதுமை மத்தியரேகைப் பிரதேசங்களில் விளைய ஆரம்பித்துவிடும். எனவே நாம் அரிசியை விலக்கிக் கோதுமை சாப்பிடும் காலம் நெருங்கிவிட்டது என்னலாம்?

* * *

வார்சேல்ஸ் உடன்படிக்கைக்கு விரோதமாக ஜர்மனி ரஷ்யாவுக்கு எட்டே நீர் மூழ்கிக் கப்பல்களைத்தான் அளித்ததாம். இது மிகவும் பரிதாபப்படத்தக்க விஷயமல்லவா?

* * *

இந்தக் காலத்தில் லண்டன் சிறுமிகளின் உடையின் நிறை ரு௦ அவுன்ஸ் எனக் கணக்கிடப்படுகிறது. நாகரிகம் முதிர முதிர உடையின் கனம் கூடத்தான் தாங்கமுடியாது போகிறது. நம் எல்லாருக்கும் கதர் உடுத்தமுடிகிறதா?

* * *

அலுமினியம் என்ற உலோகந்தான் மண்ணில் பெரும்பாகமாம். அசனூற்றன் பூமி ஆகாயத்தில பறக்கிறதோ, என்னவோ! சாஸ்திர அறிஞர் இதை ஒப்புக்கொள்ளாவிட்டால் நமக்கென்ன!

* * *

சீனக் குழப்பத்தால் பிறநாட்டுச் சண்டைக் கப்பல்கள் பீரங்கிகளுடன் அங்கு செல்கின்றன. எதற்காக? தேவலோகத்தை அங்கே கொண்டுவரத்தான்.

---

## தலைமை வகிக்க வேண்டுகின்றோம்.

ஹிந்துக்கள்:—அருந்தலைவரே! வகுப்புச் சண்டைகளால் நேரும் உயிர்ச்சேதங்களைப்பற்றித் தங்களுக்குத் தெரியாதா? இந்தத்தருணத்தில் தாங்கள் தலைமை வகித்து, எங்களது இன்னல்களை ஒழிக்கலாகாதா? ஹிந்துமுஸ்லீம் ஒற்றுமையைத் தாங்கள் நாட்டலாகாதா?

இந்திய முஸ்லீம்கள்:—தலைமை என்ற குதிரை இதோ நிற்கின்றது. அதில் ஏறிச் சவாரி செய்து, சுயராஜ்யப் போராட்டத்தில் இந்தியர்களுக்கு வெற்றி வருமாறு செய்யுங்கள்.

மகாத்மா:— நண்பர்களே! எனக்குத் தலைமைப் பதவி வேண்டாம். தயைசெய்து, சிறிது காலத்துக்கு என்னைக் கோராதீர்கள். எனக்கு ராட்டை போதும். எனது சீடர்கள் என்று மதித்துக் கொள்ளுபவர்கள் ராட்டையைச் கற்றலாம்.

## பொருள் அடக்கம்.



ஊழியன்

மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பார தத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற் கொண்டேன்.

காரைக்குடி
அட்சய-ஸு புரட்டாசி-மீ ௧௨-௨

## திருநாள்.

திருநாள் என்பதற்கு அழகிய நாள், செல்வ நாள் என்பது பொருள். "எது அழகியநாள்? எது செல்வ நாள்?" என்று கேட்போமானால், "அது காந்தியடிகள் பிறந்தருளிய நாள்! அது காந்தியடிகள் பிறந்தருளிய நாள்!!" என்று உரத்துக் கூறுவதன்றி வேறென் கூறமுடியும்? திருநாள் என்று பிற பல நாட்களும் கூறப்படுகின்றன; என்றாலும் திருநாள் என்ற சிறப்புப் பெயருக்கு அடிகள் பிறந்த நன்னாளை தகும் எனச் சாற்றவும் வேண்டுமோ?

அடிகள் தோற்றத்திற்குக் காரணமாக நின்ற உயர் நாளை அழகிய நாளென்றும் செல்வ நாளென்றும் அறைதற்குக் காரணமுங் கூறவா வேண்டும்? யாவரும் அறிந்த ஒன்றை விரித்தல் எற்றுக்கு? பாழ்பட்ட உலகத்தை—பேரழகுடைய அறப் பேருலகமாக்க அரிதில் முயல் அறவோனை அளித்த அந்நாளை அழகுடை நாள் என்றும், எவராயினும் ஒருவர் செல்வத்தை ஒருவர் கொள்கை கொள்ளாது அவரவர்க்கு உரிமையாகத் தக்க செல்வத்தையே அவரவரும் கொண்டொழுக வேண்டும் என்னும் உயர் பெருங்கொள்கை கொண்ட ஒருவனை உதவிய ஒருநாளைச் செல்வ நாள் என்றும், தன்னிடமில்லாச் சிறப்பொன்று எவரிடமும் புவியில் இல்லையெனச் சாற்றத்தக்க சிறப்பெலாம் ஒருங்கே அமையப்பெற்ற புண்ணியனை ஈன்ற புண்ணிய நாளைத் திருநாள் என்றும் புகல்வதை எவரே மறுக்க வல்லார்?

அப்பெரியோன் புகழைப் பேசப் புகின் எப்புகழை எவ்வாற்றால் பேசி எப்பொழுது முடிப்பது என்ற ஐயம் எவர்க்கும் தோன்றாமல் இரா. அவன் புகழை எழுத்தால் யாங்ஙனம் எழுத வல்லேம்! அன்றி இயலுமாறு எழுதப் புகுந்தாலோ இச்சிறு பகுதி அனைத்தையும் அடக்கும் அளவும் உடைத்தன்று. தவிர யாவும் உலகெலாம் அறிந்த ஒன்று. சுருங்கக் கூறுவோமானால், "தரும நீதியின் தற்பயனாவது உன் கருமமே யன்றிக் கண்டிலங் கண்களால்" என்று கம்பர் கூறியதை யொப்ப **அறங்களாவன காந்தியின் செயல்கள்** என்று முடிக்கலாம். அப்புண்ணியன் பிறந்த புண்ணிய நாள் போந்து அவன் திருவடிவத்தை ஈண்டுக் காட்டும் காட்சியைக் காணும் கண்கள் புண்ணியம் செய்தனவே.

அவ்வந்தணனை நல்கிய நாள் புரட்டாதி மக நாள். அந்நன்னாள் இப்புரட்டாதி பதினேழாம் நாளாகும். காந்தியடிகட்கு புரட்டாதி பதினாறும் நாளோடு ஐம்பத்தேழு ஆண்டுகள் நிறைகின்றன. ஐம்பத்தெட்டாவது ஆண்டு பதினெட்டா நாள் ஞாயிறன்று பிறக்கின்றது. அத்திருநாளில் அடிகள் புகழ் ஓதி அவருக்குப் பல்லாண்டு கூறி அன்னார் செயலை அவனியெலாம் பெருக்க வேண்டுவது அன்பர் கடமை. அடிகள் வாழ்க! அவனி வாழ்க!!

புகழ்சேர்சுக் கிலவாண்டுப் புரட்டாதித்
திங்கள்பதி னெட்டாம் நாளில்
புண்ணியநந் திருநாட்டைப் பிடித்தசனி
யகன்றோடச் சனிவா ரத்தில்
மகிழ்கூர மக்களெலாம் மகம்வந்த
பெரியோனை மகித லத்தில்
மற்றொருவர் ஒப்பில்லா மாண்டகுணம்
வாய்ந்தானை வள்ளல் தன்னை
இகழ்செய்கை எள்ளளவும் இல்லானை
என்னெளிய இதயந் தன்னில்
என்றுமுள எம்மானை எழிற்காந்திப்
பெம்மானை இனிது காக்க
செகமனைத்தும் ஆக்கியளித் தழித்துமறைத்
தருளைத்து செயலும் வல்ல
திண்மையனே சிலமுளார் திருமனத்தில்
திகழுறையுந் தேவ தேவே.

(காந்தி பிள்ளைத் தமிழ்.)

## தென்னாப்பிரிக்காத் — — — தூதர்கள்.

**தென்னாப்பிரிக்கா அரசாங்கத்தா**ரால் அனுப்பப்பெற்ற தூதர்கள் இப்பொழுது இந்தியாவுக்கு வந்திருக்கிறார்கள். பம்பாய் நகரத்துக்கு, அவர்கள் வந்துசேர்ந்ததும், "இந்திய அரசாங்கத்தின் அழைப்புக்கிணங்க, இந்த நாட்டுக்குத் தாங்கள் வந்திருப்பதாக" தூதர்களின் தலைவர் கூறினார். அதே தலைவர் சென்னையில் பேசும்பொழுது, "இந்திய அரசாங்கத்தார், இந்தியப் பொது ஜனங்கள் இருவரும் கொடுத்த அழைப்புக் கிணங்க" என்று திருத்திப் பேசியிருக்கிறார். உபசாரச் சொற்களிலாவது இந்தியப் பொது ஜனங்களைச் சேர்த்துக்கொள்ளத் தூதர்களுக்கு யோசனை தோன்றியது சுற்றுப் பிரயாணத்தின் பயன் எனக் கூறலாம். தூதர்களின் இந்தியச் சுற்றுப்பிரயாணத்தின் மூலமாய், பெருநலன் தென்னாப்பிரிக்கா இந்தியர்களுக்கு விளையும் என்று நாம் நம்பவில்லை. சக்தியில்லாதவனுடைய வாதமும் கட்சி நியாயமும் குப்பைத் தொட்டியிலே தான் போடப்படும் என்பதை உலக அனுபவம் பெற்றவர்கள் உணரமாட்டார்களா?

மனிதர்கள் ஒருவரை யொருவர் நேருக்கு நேராகக் கண்டு பேசாமற் போனால், சந்தேகமும் தவறான எண்ணங்களும் உதிப்பது இயல்பு. அதிகார வருக்கத்தினருக்கு அடிமைப்பட்டுக் கிடக்கும் இந்தியர்களைப்பற்றி ஆயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள ஒரு இடத்திலிருந்து, முடிவுகொள்ள எத்தனித்தால், பெரும்பாலும் அது பிழையாக விருப்பினும், அவ்வாறு கொள்ளுவது இயல்பு. ஒரு நாட்டை அதில் தோன்றியுள்ள உத்தமர்களைக் கொண்டு மதிப்பது அழகாகும், நேர்மையாகும். உலகத்தில் இவ்வாறு இதுவரையிலும் நேர்ந்ததில்லை.

ஆங்கிலேயர்களின் தன்மையை இந்தியாவிலிருக்கும் அதிகார வருக்கத்தினரைக்கொண்டு, நம் நாட்டார்கள் அளக்கின்றார்கள். தென்னாப்பிரிக்கா வெள்ளையர்கள் இந்தியர்களை தென்னாப்பிரிக்காவில் குடிபுகுந்திருக்கும் ஏழைக் கூலி இந்தியர்களைக்கொண்டு அளக்க முயலுவது இயல்பேயாகும். அதாவது எந்த நிகழ்ச்சியையும் மனிதனையும் பொறுமையுடன் தீர விசாரித்து, இறந்த காலம், நிகழ் காலம், எதிர்காலம் என்ற முக்காலங்களையும் அனுசரித்து ஒன்று கூட்டி, மதிக்கும் உத்தம முறையை, உலகில் இதுவரையிலும் பெரும்பான்மையோரான மனிதர்கள் கைக்கொண்டதில்லை. வேற்றுமைகளும், தவறான கருத்துக்களும், சண்டைகளும், பகைமையும் சந்தேகமும் உலகில் இக்காலத்தில் மலிந்து கிடப்பதற்கு, மேற்கூறியதையே சிறப்பான காரணமாகக் கூறலாம். எனவே தென்னாப்பிரிக்காத் தூதர்கள் இந்தியாவுக்கு வந்து சுற்றுப்பிரயாணம் செய்யத் தீர்மானித்தது நல்ல காரியம் தான்.

தன் சொந்த முயற்சியிலோ, உலக மாபெரும் இயக்கங்களின் போக்கின் தூண்டுதலால் ஆங்கிலநாடு தனது தவறை உணர்ந்து கொள்ளுவதினாலோ, இந்தியா விரைவில் சுயராஜ்யம் அடைவது உறுதி என்று சீமான் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார், தென்னாப்பிரிக்காத் தூதர்களின் சென்னை விஜயத்தை முன்னிட்டு, "ஹிந்து"ப் பத்திரிகைக்குச் செய்தி அனுப்பியிருப்பது உண்மையிலும் உண்மை. இந்த உண்மையை உணராமல், தென்னாப்பிரிக்கா அரசாங்கத்தார் இறந்த காலத்தையும் நிகழ் காலத்தையும் மட்டும் கருத்தில் கொண்டு, இந்தியாவின் எதிர்கால வாழ்வைச் சிறிதும் சிந்தனை செய்யாமல் வினையாற்றப் பார்ப்பது ராஜதந்திரக் குறைவை வெளிக்காட்டுவதாகும். "மந்திரிக் கழகு வரும் பொருள் உரைத்தல்" என்பது முதுமொழி. தென்னாப்பிரிக்கா மந்திரிகளுக்கு அழகு வரும் பொருள் உணர்தலாகும். சுதந்திர இந்தியாவின் மகத்தான சக்தியை மனத்திற் கொள்ளாமல், தற்போதைய நிகழ்ச்சிகளின் தூண்டுதலைக் கொண்டு, தென்னாப்பிரிக்கா அரசியலார் வினையாற்ற முற்படுவது, எதிர்காலத்தில் அந்த நாட்டுக்குப் பெரும் இன்னலை விளைக்கும் என்பதில் ஐயமில்லை.

நேற்றைபவரையிலும் போராடிக் கொண்டுவந்த பிரான்ஸ் நாடும் ஜர்மனியும் கூடிக்கலந்து கொள்ளத் தீர்மானம் கொண்டிருப்பது சாதாரண ஜனங்களுக்கு வியப்பைத் தருவதாயிருக்கலாம். உலக நாடுகளின் வாழ்க்கைத் தத்துவமும் நாகரிக முறையும், செல்வ நிலையும் மனப்போக்கும் இப்பொழுது இருக்கும் நிலையில் இருக்குமளவும், குருட்டு ராஜ தந்திரத்துக்கு ஆதிக்கம் இருந்துவரும். குருட்டு ராஜ தந்திரம் உயிர் பெற்று இருக்குமளவும், மோசமான உடன்படிக்கைகளும் போரும் நிகழ்வது நிச்சயம். எனவே உலகத்தின் ஒரு மூலையில் ஒதுங்கிக் கிடக்கும் தென்னாப்பிரிக்கா வெள்ளையர்கள், சமுதாயமாக ஆசியாக் கண்டத்துக் கறுப்பு நிறத்தவர்களை அலட்சியம் செய்து அவர்களுக்கு இன்னல் விளைக்கக் கருதுவது, தென்னாப்பிரிக்காவின் எதிர்கால வாழ்வு நன்னிலை பெறுவதற்கு இடையூறாக நிற்கும். இதைத் தென்னாப்பிரிக்காத் தூதர்கள் தங்கள் நாட்டாருக்கு எடுத்துரைப்பார்களா?

## இடி முழக்கம்.

### தணியுமா?

சுதந்திரதாகம் மரண தாபத்தைப்போலக் கொடுமை கொண்டது. குடிமக்களின் சுதந்திர தாகத்தை அடக்கிவிட்டது போல எண்ணிக் கொண்டு, கொடுங்கோலர்கள் உள்ளம் மகிழ்வது உண்டு. கைகளைக் கொட்டி மகிழும் கொடுங்கோலர்கள் கைகளைப் பிசைந்துகொள்ளும் காலமுண்டு என்று சரித்திரத்தின் வாயிலாகநண்பர்கள் அறியக்கூடும். வீரர்களான ரிப்வகுப்பாரின் தலைவர் அப்துல் கரீம் அவர்களைக் கைது செய்தவுடனே, பிரஞ்சுக்காரர்களும் ஸ்பெயின் நாட்டாரும் அகமகிழ்ந்து, விழாக் கொண்டாடினார்கள். ஆனால் மொராக்கோவில் மீண்டும் கலவரம் ஏற்பட்டிருப்பதாகச் செய்தி கூறுகின்றது. சுதந்திரம் பெற்றாலொழிய, தேசபக்தர்களின் சுதந்திரதாபம் தணியாது என்பதை உலகக் கொடுங்கோலர்கள் தெரிந்துகொள்ளவேண்டும்.

### முகத்துக்கு முகம் கண்ணாடி.

"எவிலிங்டன் கமிஷனில் மறுப்புரை எழுதிய ஸர் அப்துர் ரஹீம் அவர்கள், இப்பொழுது தவறான முறையைக் கைக்கொண்டிருப்பினும் தேசபக்தர் அல்லவா" என்று காந்தி எழுதியிருந்ததை நண்பர்கள் அறிவார்கள். வங்காள முஸ்லீம் கட்சியின் சார்பாக, ஸர் அப்துர் ரஹீம் அவர்கள் அறிக்கையொன்று விடுத்திருக்கிறார். "சீர்திருத்தம் குறைகொண்டதாயினும் அதைக் கூடிய அளவில் பொது ஜன நலத்துக்கு உபயோகப்படுத்திக் கொள்ளுதல் அறிவாகும். வங்காள முஸ்லீம் கட்சி, கொள்கையில்லாக் குருட்டுக் கட்சியல்ல. அந்தக் கட்சி அதிகார வருக்கத்தினரையும் எதிர்த்துப் போராடும்; இந்திய முஸ்லீம்களின் நலத்துக்கு எதிர் நிற்கும் கட்சிகளையும் எதிர்த்துப் போராடும்" என்று அறிக்கையில் காணப்படுகின்றது. தாம் முன்னிருந்த நிலையை விடுத்து, வேறு நிலைக்கு—காந்தியின் கடிதத்துக்குப் பின் என்பதை நண்பர்கள் உணரவேண்டும்—ஸர் அப்துர் ரஹீம் அவர்கள் வந்ததுபற்றி நாம் மகிழ்ச்சியடைகின்றோம். ஆனால் இந்திய முஸ்லீம்களின் நலன் எத்தகைத்து என்பது மட்டும் நமக்கு விளங்கவில்லை. இந்த நாட்டில், எந்த வகுப்பாருக்கும் தனி நலன் இருக்க முடியாது. இருக்குமானால் அது நாட்டின் பொது நலனுக்கு விரோதமாகும். தனிநலன் உண்டு என்று சாதிப்பவர்கள் பேதைகள் அல்லது பொய்யர்கள். பொதுநலத்தில் தருமத்துக்கும் தருமத்துக்கும் ஏற்றவாறு எல்லா வகுப்புகளுக்கும் பங்கு உண்டு. மேலும் தனி நலன் உண்டென்றும் வைத்துக்கொள்ளுவோம். பொது நலத்துக்காக உழைத்துப் பாடுபடாத வகுப்புக்கு, கூட்டத்துக்கு தனி நலன் உண்டாகமாட்டாது. அதிகார வருக்கத்தினர் அவ்வளவு மூடர்களல்ல. மிதமிஞ்சி, எந்தக் கூட்டத்தாரின் ஆதிக்கமும் வளரவிட, அதிகாரவருக்கத்தினர் சம்மதிக்கமாட்டார்கள். கட்சி வேற்றுமைகளில் துணிந்து இறங்குபவர்கள் இந்த உண்மையை உணரவேண்டும்.

### படுகொலைகள்.

தற்கொலைகளும் ரயில் படுகொலைகளும் நமது நாட்டில் மலிந்து வருகின்றன. தற்கொலைகளின் தூண்டுதலைப்பற்றி விசாரித்துப் பரிகாரம் தேட முற்படுவது தலைவர்களின் கடமையென அன்று எழுதினோம். நாளுக்குநாள் ரயில் படுகொலைகள் அதிகரித்துவருகின்றன. இது ரயில் ஓட்டுபவர்களின் அலட்சிய புத்தியைக் காண்பிக்கின்றதா? அல்லது நமது நாட்டார்கள் ஏக்கம் உற்று, மதிமயங்கித் திகைத்துப் போய் ரயில் தண்டவாளங்களில் மாட்டிக்கொள்ளுகிறார்களா? கவலையிலே சிக்கிக்கொண்டிருக்கும் இந்தியர்கள் இராக்காலங்களிலும் வழிநடக்க நேருகின்றது. புகைவண்டித்தொடர் வரும் சத்தமும் அவர்களின் காதுகளில் படக்கூடாத நிலைமையில் அவர்கள் இருக்கின்றார்கள். கள்ளிருளில், ரயில் பாதையில் பிரயாணிகள் அல்லது விலங்குகள் உண்டா என்று பார்த்து வண்டியை ஓட்டவேண்டும். ஓட்டுபவர்களுக்கு "ஸர்ச்சு லைட்" முதலிய சாதனங்கள் அமைத்துக் கொடுபடல் வேண்டும். ரயில்வே நிர்வாகிகளால், வசதிகள் அளிக்கப்பெற்ற பின்னரும், படுகொலைகள் நேருமாயின், உண்மையான குற்றவாளிகள் யாவர் என்று பின்னர் நிர்ணயித்துக்கொள்ளமுடியும். பொது ஜனங்கள் அக்கரை கொண்டு கிளர்ச்சி செய்யாத வரையிலும், ரயில்வே நிர்வாகிகள் இது சங்கதியில் தங்கள் கவனத்தைச் செலுத்தப் போவதில்லை. யாருடைய உயிர் போகின்றது? தங்களுடைய உயிர் என்பதைப் பொது ஜனங்கள் உணரவேண்டும்.

### உலகப்போக்கு.

இத்தாலியில் முஸ்ஸோலினி பேசுவதும், ருஷியாவில்டிராட்ஸ்கி செய்ய முயலுவதும், ஆங்கில நாட்டில் பெர்னார்ட்ஷா எழுதுவதும், பிரஞ்சு ஜர்மனி நாட்டின் அரசியல் நிர்வாகிகள் கூடிக் கலப்பதும், சீனாவில் கலகம் நிகழ்வதும், ஜப்பானுடைய போக்கும்—இவைகள்தான் உலகத்தாரின் வாழ்வை நிர்ணயிக்கின்றன. "வல்லான் வகுப்பதே வாய்க்கால்" என்பது அமுதமொழி. "கிணற்றுத்தவளைக்கு நாட்டுவளப்பமேன்" என்ற பழமொழியின் உயிர்போய் வெகுகாலமாகிவிட்டது. இனி உலகில் எந்த நாடும், ஒதுங்கித்தனிவாழ்வுநடத்த முடியாது. திரளாகக்கூடி வாழ்வதே உலகத்தின் தற்போதைய போக்காகும். உலக நாடுகளிலிருக்கும் வல்லார்களின் வாய்மொழிகளை ஊன்றிக் கவனிப்பது நம்மவர்களின் கடமையாகும். "உங்களுடைய அசுத்தமான துளைகளிலிருந்து வெளியே வாருங்கள்" என்று விவேகானந்தர் பல ஆண்டுகளுக்கு முன் இந்தியர்களுக்கு வற்புறுத்திக் கூறியது, தற்காலத்துக்கு இந்தியாவுக்கு இன்றியமையாத தேவையாகும். நாட்டு வளப்பத்தையும் உலகப்போக்கையும் அறிந்துகொண்டாலொழிய, வீட்டை வளம்பெறச் செய்ய, எந்த இந்தியனும் முடியாது. எனவே நம்மவர்கள் உலகப் போக்கை நன்கு கவனித்துவருமாறு பன்முறையும் நாம் வற்புறுத்திக்கூறுகின்றோம்.

## காந்தி திருநாள்.

காந்தியடிகளின் ஐம்பத்தெட்டாவது பிறந்த திருநாள் இப் புரட்டாதித் திங்கள் பதினேழாம் நாள் ஞாயிற்றுக் கிழமை அமராவதி புதூரில் நடைபெறுகிறது.

ஆயிரக்கணக்கான மக்கட்கு அன்னமளிக்கப்பெறும்.

மாலையில் சென்னை நவசக்தி ஆசிரியர் திரு வி. கல்யாண சுந்தர முதலியார் அவர்கள் தலைமையில் பல அறிஞர்களின் சொற்பொழிவு நிகழும். இரவில் ஊர்வலம் நடைபெறும்.

சரியேயாகும்.

"நான் ஹிந்து இந்திய முஸ்லீம்களின் கொடுஞ் செயல்களும், சுயராஜ்யத்தில் கவலையில்லாமல் அவர்களிருப்பதும் எனக்குத்துயரத்தை உண்டாக்குகின்றன, என்றாலும் காங்கிரசை இந்தியப் பொதுஜனங்கள் ஆதரிக்கவேண்டும் என்றுநான் யோசனைகூறுகின்றேன். நாடு முற்போக்கான வழியில் சென்றுகொண்டிருக்கும் தருணத்தில், பிற்போக்கு யோசனை கூறுவதில் நிபுணரான பண்டித மாளவியாவின் புத்திமதியைக் கேட்கவேண்டாம். காங்கிரஸ் ஒன்றே இந்தியர்களின் சுயராஜ்யப் பொது நிலயமாகும்" என்று சுவாமி சத்தியதேவர் நாகபுரியில் பேசியுள்ளார். கண்களுக்குக்கடுநோய்கண்டு, அதற்குச் சிகிச்சை செய்துகொள்ள அயல்நாடுகளுக்குச்செல்ல எத்தனிக்கையில், சுவாமி அவர்கள் செல்லவொட்டாமல், இந்திய அதிகார வருக்கத்தினர் தடுத்துவிட்டார்கள். சுவாமி அவர்களின் நாட்டுப்பற்றுக்கு வேறு அத்தாட்சியும் வேண்டுமா? வெள்ளக்காலத்தில் ஆற்றைப்போற்றி, நீர்வரண்டகாலத்தில் அதை மண்போட்டுத் தூர்ப்பவர்கள் இந்த உலகில் இருப்பார்களா? மீண்டும் வெள்ளம் வரும்பொழுது, வருவதற்கு, வேறு ஆற்றை வெட்டுவதா? காங்கிரஸ் இப்பொழுது பயனற்ற வேலையைக் கைக்கொண்டிருக்கலாம். போர் இல்லாத காலத்தில் கத்தியைக் கலப்பையாகமாற்ற எண்ணங்கொள்ளலாமா? இவ்வாறு செய்தால், அது மதியீனமாகும். எத்தனை குறைகள் இருந்தபோதிலும், காங்கிரஸ் ஒன்றே இந்தியர்களின் பொது உடமையாகும்; பொதுவான ஆயுதமாகும்; பொதுவல்லமையின் குறியாகும். எனவே கொள்கை வேற்றுமையெனக்கொண்டு, காங்கிரசின் சீரையும் சிறப்பையும் குலைக்க எண்ணுவது தவறாகும்.

### எத்தகைய நகைச்சுவை!

"கொள்கைப்பித்தர்கள் நகைக்க மாட்டார்கள்; அவர்களிடம் நகைச்சுவையிருக்காது" என்று பலர் வீணாக எண்ணங்கொண்டிருக்கிறார்கள். கொள்கையாளர்கள் முகத்தை எப்பொழுதும் சுளித்துக்கொண்டிருக்க வேண்டுமென்பதுண்டா? "என்னிடம் நகைச்சுவையில்லாவிடின், நான் வெகுகாலத்துக்கு முன்னரே, தற்கொலைசெய்துகொண்டிருப்பேன்" என்று காந்தி ஒரு சமயம் கூறியிருக்கிறார். இளமையைக் காப்பதற்கும் கவலையை ஒழித்துக் கொள்ளுவதற்கும் தன்தவறை ஓர்வதற்கும் நகைச்சுவை மிகமிகத் தேவையாகும். நகைச்சுவையில்லாத மனிதனால், மனிதர்களை ஒன்று கூட்டி, அவர்களைக் காரியம் செய்யத் தூண்டமுடியாது. முகக்கவர்ச்சி ஏற்படுவதும் அக அமைதி ஏற்படுவதும் நகைச்சுவையின் மூலமாகத்தான். எனவே "காந்தி ஹாஸ்யமாகப்பேசி, நன்றாக நகைக்கின்றார்" என்று எகிப்திய நாட்டு மாது ஸைக்கியா ஸாலைமான் கூறியிருப்பது நமக்கு வியப்பைத்தரவில்லை. காந்தியின் நகைப்பு எத்தகைய நகைப்பு? அது எதிர்ப்பை அறவேகொல்லும் நகைப்பல்லவா? அந்த நகைப்பில், அவமதிப்பாவது, பகைமையாவது இம்மியளவும் இருக்கப்பெறுமா? பிறர் குறைகளைப்பற்றிப் பேசி நகைப்பது எளிதானகாரியம். ஆனால் எவரையும் புண்படுத்தாமல், எவரையும் அவமதிக்காமல், சிரிப்பைத்தூண்டும் நகைச்சுவையே உயர்ந்த "சரக்காகும்". எத்தனையோ நற்குணங்கள் காந்தியிடம் இருக்கின்றன! அத்தகைய குணங்களில் சிலவற்றையேனும், நமது நாட்டார் கொண்டாலல்லவோ, நமது நாடு முன்னேறும்?

# காந்தியடிகளின் சரிதம்.

## நெட்டால் இந்தியன் காங்கிரஸ்.

மகாத்மா அவர்கள் "நவஜீவன்" பத்திரிகையில் எழுதியது.

### இரண்டாவது பாகம்.

அத்தியாயம் கசு.

வக்கீல் தொழிலை எப்பொழுதுமே நான் முதல் வேலையாகக் கருதினதில்லை. நெட்டாலில் நான் தங்கியிருப்பதற்கு சமாதானம் கூறவேண்டுமானால், பொதுஜன ஊழியத்தில் எனது முழு கவனத்தையும் செலுத்த வேண்டியது மிகமிகத்தேவையாகும். வாக்குரிமைப் பறிமுதல் மசோதாவைப்பற்றி மனு அனுப்பியதுமட்டும் போதுமானதல்ல. குடியேற்ற நாட்டு மந்திரியின் உள்ளத்தில் இதைப்பற்றிப்பதிவு ஏற்படவேண்டுமாயின், விடாமல் கிளர்ச்சி செய்வது அவசியமாகும். இந்த நோக்கத்துக்காக, சாசுவத அமைப்பு ஒன்றைக் காணுவது அவசியம் எனக்கருதப்பட்டது. அப்துல்லா சேத் அவர்களையும் ஏனைய நண்பர்களையும் நான் கலந்துகொண்டேன். சாசுவதத்தன்மை படைத்த பொது அமைப்பு வேண்டுமென நாங்கள் அனைவரும் தீர்மானங்கொண்டோம்.

புதிய அமைப்புக்கு என்ன பெயர் கொடுப்பது என்பதைப்பற்றி, நான் மிகவும் திகைத்துப்போனேன். அது எந்தக்கட்சியுடனும் ஒட்டிக்கொண்டிருக்கலாகாது. பிற்போக்குள்ளவர்களுக்கு காங்கிரஸ் என்றபெயர் இனிக்கவில்லை. என்றாலும் காங்கிரஸ்தான் இந்தியாவின் உயிராகும். அந்தப்பெயரை ஏற்கத்தயங்குவது கோழைத்தனம் ஆகும். எனவே, என்னுடைய காரணங்களை விரிவாக எடுத்துரைத்து, அமைப்புக்கு 'நெட்டால் இந்தியன் காங்கிரஸ்' என்று பெயரிடவேண்டும் என நான் யோசனை கூறினேன். மே மாதம் உஉந்தேதி நெட்டால் இந்தியன் காங்கிரஸ் உருவாய்த் தோன்றிற்று.

அன்றைக்கு தாதா அப்துல்லா அவர்களின் விசாலமான அறையில் இந்தியர்கள் குழுமியிருந்தனர். அங்கு பிரசன்னமாயிருந்தவர்கள் அனைவருடையவும் உற்சாகமான ஆதரவைக் காங்கிரஸ்பெற்றது. காங்கிரஸின் அமைப்புவிதி எளிது; ஆனால் கட்டணத்தொகை அதிகம். மாதமொன்றுக்கு ஐந்து ஷில்லிங் (மூன்றே முக்கால் ரூபாய்) கொடுத்தவர் தான் அங்கத்தினராய் இருக்க முடியும். தங்களால் கூடிய அளவு கொடுக்குமாறு தனவந்தர்கள் தூண்டப் பெற்றனர். அப்துல்லா சேத் அவர்கள் மாதம் இரண்டு பவுன் கொடுப்பதாக முதன் முதல் கையெழுத்திட்டார். ஏனைய இரண்டு நண்பர்கள் அதே தொகைக்குக் கையெழுத்திட்டார்கள். என்னுடையகட்டணத்தைக்குறைக்கலாகாது என்று எண்ணி, நான் மாதம் ஒன்றுக்கு ஒரு பவுன் எழுதினேன். எனக்கு இது சிறிய தொகை அல்ல. என்னால் வாழ்வு நடத்தக்கூடுமானால் இந்தத்தொகை எனக்கு அதிகமாயிருக்க முடியாது என்று எண்ணினேன். கடவுள்எனக்குத்துணைபுரிந்தார். மாதமொன்றுக்கு ஒரு பவுன் எழுதிய அங்கத்தினர்களின் தொகை எங்களுக்கு அதிகமாகக்கிடைத்தது. அரைப்பவுன் எழுதினவர்களின் எண்ணிக்கையோ இன்னும் அதிகமானதாகும். தவிர நன்கொடைகளும் வந்தன. அவைகளை நன்றியுடன் ஏற்றுக் கொண்டோம்.

கேட்டமாத்திரம் எவரும் தங்கள் கட்டணத்தைக்கொடுப்பதில்லை என்று அனுபவ மூலமாய்த் தெரியவந்தது. தர்பானுக்கு வெளியே இருந்த உறுப்பினர்களை அடிக்கடி காணுவது இயலாது. ஒரு நிமிஷத்து உற்சாகம் அடுத்த நிமிஷம் தேய்ந்து போவதாகத் தோன்றிற்று. தர்பானிலுள்ள அங்கத்தினர்கள்—பல தடவைகளில் கேட்ட பின்னரே—தங்கள் கட்டணங்களைச் செலுத்தினார்கள்.

நான் காரியதரிசி; எனவே கட்டணங்களை வசூலிக்கும் பொறுப்பு என் பேரில் விழுந்தது. வசூல் வேலையில் நாள் முழுதும் ஒரு குமாஸ்தாவை நான் அமர்த்திவைக்கவேண்டிய நிலைக்கு, நாங்கள் வந்துவிட்டோம். குமாஸ்தாவுக்குத்தன்வேலையில் சலிப்பு உண்டாயிற்று. எனவே நிலைமையில் திருத்தம் ஏற்படவேண்டுமானால், கட்டணத்தை மாதமல்லாமல் வருஷமாக ஆக்கவேண்டும் என்று நான் உணர்ந்தேன். வருஷக் கட்டணமும் நிச்சயமாய் முன்பணமாகக் கட்டவேண்டும். எனவே காங்கிரஸ் மகாநாடு ஒன்று கூட்டினேன். மாதச் சந்தா இல்லாமல் வருஷச் சந்தா ஆக்குவதிலும், அதை மூன்று பவுன் என்று நிலைத்துக்கொள்ளுவதிலும் ஒவ்வொருவரும் உற்சாகம் காட்டினார்கள். இவ்வாறு வசூல் வேலை மிகுதியும் எளிதாக்கப் பெற்றது.

கடன் வாங்கின பணத்தைக்கொண்டு பொதுஜன வேலையை நடத்தலாகாது என்று துவக்கத்திலேயே நான் தெரிந்துகொண்டேன். பண விஷயத்தில் தவிர ஏனையசங்கதிகளில், மனிதர்களுடைய வாக்குறுதிகளில் ஒருவன் நம்பிக்கை வைக்கலாம். தாங்கள் கட்டணமாகச் செலுத்த ஒப்புக்கொண்ட தொகையை ஜனங்கள் விரைவில் கொடுப்பதை நான் கண்டதில்லை. இந்த விதிக்கு நெட்டால் இந்தியர்கள் விலக்கல்ல. கையில் பணமிருந்தாலொழிய எந்த வேலையும் சாத்தியமல்ல; நெட்டாலின் காங்கிரசுக்கு ஒருபொழுதும் கடன் ஏற்பட்டதில்லை.

அங்கத்தினர்களைச் சேர்ப்பதில், எனது சகாக்கள் மிதமிஞ்சிய உற்சாகத்தைக் காட்டினார்கள். அது அவர்களுக்குப் பிடித்த வேலையாகும். தவிர அது விலையில்லா அனுபவமுமாகும். ரொக்கச் சந்தாவுடன் பலர் விருப்புடன் முன்வந்தார்கள். உள் நாட்டில் எட்ட இருந்த கிராமங்களில் வேலை செய்வது சற்றுக் கடினமாயிருந்தது. பொதுஜன வேலையின் தன்மையே ஜனங்களுக்குத் தெரியவில்லை. என்று லும் தொலைவிடங்களுக்கு வருமாறு எங்களுக்கு அழைப்புகள் கிடைத்தன. அந்தந்த இடத்துப் பிரபல வியாபாரிகள் எங்களுக்கு உபசாரமும் விருந்தும் அளித்தார்கள்.

இந்தச் சுற்றுப் பிரயாணத்தில் ஒரு சமயத்தில் நிலைமை சற்றுக் கஷ்டமாகி விட்டது. எங்களை உபசரித்தவர் ஆறு பவுன் கொடுப்பாரென்று நாங்கள் எதிர்பார்த்தோம். ஆனால் மூன்று பவுனுக்கு அதிகமாக ஒரு காசு கூடக் கொடுக்கமுடியாது என்று அவர் கூறி விட்டார். அந்தத் தொகையை அவரிடமிருந்து நாங்கள் ஏற்றுக்கொண்டிருந்தால், ஏனையோரும் அவரைப்போலவே செய்திருப்பார்கள். எங்களுடைய வசூலும் கெட்டுப்போயிருக்கும். மிதமிஞ்சிய பசி. நாங்கள் வாங்கவேண்டுமென்று தீர்மானம்கொண்டிருந்த தொகையை முதலில் பெற்றுக் கொள்ளாமல் எவ்வாறு உண்பது? நாங்கள் எவ்வளவோ நயமாகப் பேசிப்பார்த்தோம். ஆனால் அவர் மசியவில்லை. நகரத்திலுள்ள ஏனைய வியாபாரிகள் அவருடன் வாதம் பண்ணினார்கள். நாங்கள் அனைவரும் இரவு முழுதும் உட்கார்ந்துகொண்டிருந்தோம். இரு கட்சிகளும் தளர்ந்து போவதாக எண்ணங் கொள்ளவில்லை. என்னுடைய சகாக்களில் பலருக்கு ஆத்திரம் பொங்கிற்று. ஆனால் அவர்கள் தங்களை அடக்கிக் கொண்டார்கள். கடைசியாகப் பொழுது விடிகிற சமயத்தில் அவர் இணங்கி ஆறு பவுன் கொடுத்து, எங்களுக்கு விருந்தும் அளித்தார். இது 'டோங்காட்' என்னுமிடத்தில் நிகழ்ந்தது. ஆனால் இந்த நிகழ்ச்சியின் ஒலி வட கடற்கரையில் உள்ள 'ஸ்டேஞ்சர்' என்னும் ஊர் வரையிலும் உள் நாட்டிலுள்ள 'சார்லஸ் டவுன்' வரையிலும் எட்டிற்று. மேலும் இது எங்கள் வசூல் வேலையை விரைவுபடுத்திற்று.

சந்தா வசூலிப்பது மட்டும் வேலையல்ல; தேவைக்கதிகமாகப் பணம் வைத்துக்கொள்ளலாகாது என்ற கொள்கையை நான் உண்மையிலேயே முற்றும் உணர்ந்து கொண்டேன்.

மாதமொருமுறை, தேவையானால் வாரமொருமுறை கூட்டங்கள் கூட்டப்பெறுவது வழக்கம். சென்ற கூட்டத்தின் நடவடிக்கைக் குறிப்புகள் படிக்கப்பெறும். எல்லாவிதமான சங்கதிகளும் வாதிக்கப்பெறும். பொது வாதங்களில் கலந்து கொள்ளுவதிலும் விஷய சம்பந்தமாக சுருங்கப்பேசுவதிலும் ஜனங்களுக்கு அனுபவமில்லை. பேச எழுந்திருக்க ஒவ்வொருவரும் தயங்கினார்கள். நடவடிக்கைகளின் விவரங்களை அவர்களுக்கு நான் எடுத்துக் கூறினேன். அவர்கள் அவைகளை மதித்தார்கள். அது தங்களுக்குப் படிப்பினை என்று உணர்ந்தார்கள். கூட்டத்தில் பேசப் பழக்கமில்லாதவர்கள், யோசிக்கும் பழக்கத்தையும் பொதுஜன சம்பந்தமான விஷயங்களைப்பற்றிக் கூட்டத்தில் பேசுவதையும் விரைவில் கைக்கொண்டார்கள்.

பொதுஜன வேலையில், சில்லரை சங்கதிகள் சில சமயங்களில் அதிகப் பணம் விழுங்கும் என்று எனக்குத் தெரிந்திருந்ததால், ரசீது புஸ்தகங்கள் கூட துவக்கத்தில் அச்சிடப்பெறலாகாது என்று நான் தீர்மானித்திருந்தேன். என்னுடைய காரியாலயத்தில் ஒரு 'ஸைக்ளோஸ்டைல்' இயந்திரம் இருந்தது. அதைக்கொண்டு, நான் ரசீதுகளையும் அறிக்கைகளையும் தயார் செய்தேன். காங்கிரஸ் கஜானாவில் பணம் நிறைந்து அங்கத்தினர்களும் வேலையும் பெருக்கடைந்த பின்னரே, அவைகளை நான் அச்சடிக்கத்துவக்கினேன். ஒவ்வொரு அமைப்புக்கும் இத்தகைய சிக்கனம் தேவையாகும். ஆனால் அது அனுஷ்டானத்தில் இருப்பதில்லையென்று எனக்குத்தெரியும். சிறிய ஆனால் வளரும் அமைப்பின் துவக்கத்தில் இந்தச்சிறிய விவரங்களில் நுழைதல் வேண்டும் என்று நான் எண்ணியதற்கு இதுவே காரணமாகும்.

தாங்கள் செலுத்திய தொகைக்கு ரசீது பெற்றுக்கொள்ள ஜனங்கள் கவலைப்படுவதில்லை. ஆனால் ரசீது பெற்றுக்கொள்ளவேண்டுமென்று நாங்கள் எப்பொழுதும் வற்புறுத்திவந்தோம். இவ்வாறு ஒவ்வொரு பைசாவுக்கும் கணக்கு இருந்தது. நெட்டால் இந்தியக் காங்கிரஸின் தஸ்தாவேஜிகளில் கஅகூ௪-ம் ஆண்டுக் கணக்கை அழியாமல் இன்றைக்கும் காணலாம். கவலையுடன் வைக்கப்படும் கணக்குகள் தான் ஒரு அமைப்புக்கு உயிராகும். அவைகள் இல்லாவிடின், அமைப்புக்கு அபகீர்த்தி உண்டாகும். தெளிவான கணக்குகள் இல்லாவிடின், உண்மையைச் சுத்தமாகக் காக்கமுடியாது.

குடியேற்ற நாடுகளில் பிறந்த, படித்த இந்தியர்களின் தொண்டு, காங்கிரஸின் ஏனைய அமிசமாகும். காங்கிரஸின் ஆதரவில் "குடியேற்ற நாட்டில் பிறந்த இந்தியர் கல்விச் சங்கம்" காணப்பெற்றது. கல்விகற்ற இளைஞர்களே இதன் உறுப்பினர்களாவர். 'மாமூல்' சந்தா அவர்கள் கொடுக்க வேண்டும். சங்கத்தின் மூலமாகத் தங்கள் தேவைகளையும் குறைகளையும் பேசி யோசிக்கக் கற்றுக்கொண்டு, இந்திய வியாபாரிகளுடன் கலக்கவும், சமூக ஊழியம் செய்யவும் அவர்களுக்குச் சந்தர்ப்பமேற்பட்டது. அது ஒரு விவாதச் சங்கத்தைப்போன்றது. உறுப்பினர்கள் ஒழுங்காகக் கூடி, பல விஷயங்களைப்பற்றிப் பேசி, கட்டுரைகள் படித்தார்கள். சங்க சம்பந்தமாக ஒரு சிறு புத்தக சாலையும் திறக்கப் பெற்றது.

காங்கிரஸின் மூன்றாவது பகுதி கிளர்ச்சியாகும். நெட்டாலின் உண்மை நிலையை இந்தியாவிலிருக்கும் ஜனங்களுக்கும் தென்னாப்பிரிக்காவிலும் ஆங்கில நாட்டிலும் இருக்கும் ஆங்கிலேயர்களுக்கும் அறிவுறுத்துவது கிளர்ச்சியின் வேலையாகும். அந்த நோக்கம்கொண்டு இரண்டு துண்டுப் பிரசுரங்கள் எழுதினேன். "தென்னாப்பிரிக்காவிலிருக்கும் ஒவ்வொரு பிரித்தானியனுக்கும் மனு" என்பது முதலாவதாகும். அது நெட்டால் இந்தியர்களின் பொதுவான உண்மை நிலையைக் குறிப்பிட்டது. நிலைக்கு உருசுவும் காட்டப்பெற்றது. "இந்திய வாக்குரிமை—ஒரு விண்ணப்பம்" என்பது இரண்டாவது துண்டுப்பிரசுரமாகும். புள்ளி விவரங்களுடன் இந்தியவாக்குரிமையின் சுருக்கமான வரலாற்றை அது தாங்குகின்றது. துண்டுப்பிரசுரங்களைத்தயார் செய்யும்பொருட்டு மிகுதியும் படித்து உழைத்து காலத்தைச் செலவிட்டேன். முடிவு, எடுத்துக்கொண்ட கவலைக்குஏற்றதாகும். அவைகள் விரிவாகப் பிரசுரப்படுத்தப்பெற்றன.

இத்தகைய ஊக்கத்தினால் இந்தியர்களுக்குத் தென்னாப்பிரிக்காவில் பல நண்பர்கள் கிடைத்தார்கள். இந்தியாவிலிருக்கும் எல்லாக் கட்சிகளினுதரவும் அவர்களுக்கு ஏற்பட்டது. தென்னாப்பிரிக்கா இந்தியர்களுக்கு தெளிவான வேலைத் திட்டமும் ஏற்படுமாறு அவர்களுக்குக் கண் திறக்கப்பெற்றது.

——

### தேர்தல் நடைபெறவில்லை.

சென்னை நகரசபைத் தேர்தலில், ஸ்ரீமான் உ. அ. உ. க. லெட்சுமண செட்டியார் அவர்கள் சுயராஜ்யக் கட்சியாரின் சார்பாக, ராயப்பேட்டைத் தொகுதிக்கு அபேட்சகராக நின்றார். கௌரவ மாஜிஸ்டிரேட் பதவியைத் தாங்கிநிற்பவர் தேர்தலுக்கு நிற்கலாகாது, எனவே ஸ்ரீமான் செட்டியார் அவர்கள் தமது பதவியைத் துறந்து, ராஜிநாமாக் கடிதமொன்றை அரசாங்கத்தாருக்கு அனுப்பிவைத்தார். மூன்று வருஷக் காலத்துக்குள் கௌரவப்பதவியைத் துறக்கலாகாது என்றும் ஸ்ரீமான் செட்டியாரவர்கள் அபேட்சகராக நிற்பதற்குத் தகுதிபெறவில்லை என்றும் நகரசபைக் கமிஷனர் தீர்ப்புச் சொல்லி, தேர்தலை நடத்த எத்தனம் செய்தார். தேர்தல் குறிப்பிட்ட நாளில் (சென்றசனியன்று) நடைபெறலாகாது என்று ஐகோர்ட்டார் தடையுத்தரவிட்டார்கள். கமிஷனர் அவசரப்பட்டது, வாக்காளர்களின் உரிமையைப் பறிமுதல் செய்வதற்குச் சமமாகும்.

——



## தனவணிகர் நாடு.

### பாகனேரி

தெற்கு வட்டகையில் முக்கியமான ஊர்களில் ஒன்றாகிய இப்பாகனேரியில், செல்வர்கள் பலரிருந்தும் கல்வி வளர்ச்சிக்குரிய வசதிகள் ஒன்றுமில்லை. மிகச்சாதாரணமான திண்ணைப் பள்ளிக்கூடங்களே உள்ளன. கருணாகடாக்ஷ வாசகசாலையானது இப்பொழுது வேலைசெய்யாது சிறிது அயர்ந்திருக்கின்றது. இவ்வூரிலுள்ள இளைஞர்கள் கல்வி வளர்ச்சிக்குவேண்டுவன செய்வாராக என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

ஃ ஃ ஃ

### அலவாக்கோட்டை

மதகுபட்டிக்கு அருகிலுள்ள இப் பெரிய ஊரில் தனவைசியச் செல்வர்கள் பலர் வசிக்கின்றனர். மாளிகைகளும் கோயில்களும் மிக அதிகமாக உள்ளன. இவ்வூருக்குக் கலாசாலை ஒன்று இல்லாததுதான் பெருங்குறை. கல்வி வளர்ச்சியில் ஊக்கமுள்ள அன்பர்கள் சிலர் இவ்வூரிலிருந்தும், கவனஞ் செலுத்தாமலிருப்பது ஆச்சரியமே. விரைவில் கலாசாலையினை ஸ்தாபனஞ் செய்வதற்கு அன்பர்கள் முயற்சி செய்வார்களாக என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

ஃ ஃ ஃ

### நாச்சியாபுரம்

கால நிலை; மழை நன்றாகப் பெய்து நீர் நிலையங்கள் நிறைந்திருக்கின்றன. மகேஸ்வர பூசை வழக்கம்போல் ஆவணித் திங்கள் உஅ-ம் நாள் விமரிசையாக நடைபெற்றது. சுமார் இரண்டாயிரம் ஏழைகட்கு ஜாதி பேதமின்றி அமுதளிக்கப்பெற்றது. நமது நாட்டில் பெரும் பாலும் பார்ப்பனர்களுக்கே இலவச உண்டி அடிக்கடி அளிக்கப் பெற்றுவருகிறது. சிற்சில சந்தர்ப்பங்களிலாவது ஏழைமக்களை மறவாது அமுதளித்து வருவது மிகவும் போற்றதக்கதென ஒரு நிருபர் எழுதுகிறார்.

ஃ ஃ ஃ

### கோநகர்

ஞானசம்பந்த நற்சபை நான்காவது மாதக் கூட்டத்தின் முதல் விழா அக்ஷயவருஷ புரட்டாசிமீ ௯உ நடைபெற்றது. சுமார் ௫0 பேர்கொண்டகூட்டம். வேதபாடசாலை யாசிரியர் பிரும்மஸ்ரீ பஞ்சாப கேசகனபாடிகள் சபைத்தலைவர். சபை நான்கு மணிக்கு ஆரம்பிக்கப்பெற்று க. வி. க. மாணவர்களால் முகவுரை கூறப்பெற்றுப் பின் சு. மு. இராமசுப்பிரமணியன் என்பவரால், பெற்றோரைப்பேணல் என்னும் விஷயமும், மு. முத்துவேங்கடாசலம் என்பவரால் கற்பு என்னும் விஷயமும், ந. விசுவநாதன் என்பவரால் கல்வியின் பயன் என்னும் விஷயமும், கொ. சீனிவாசகன் என்பவரால் மானிடயாக்கை என்னும் விஷயமும், மிகவும் விமரிசையாகக் கூறப்பட்டது. பிறகு தலைவரவர்கள் முடிவுரையை தேன் மாரி பொழிந்தாற் போல் பொழிந்தார்கள். பிறகு, க. வி. க. மாணவர்களால் மங்கல வாழ்த்துக் கூறப்பெற்று இரவு எட்டு மணிக்கு சபை இனிதாக நிறை வேறியதென்று திரு. வி. ஞானசம்பந்தன் எழுதுகிறார்.



## தாய் நாடு.

பி. என். இருப்புப் பாதையில் உடைப்புகள் ஏற்பட்டிருக்கிறதாம்.

ஃ ஃ ஃ

இந்திய தத்துவ சாஸ்திரிகள் மகாநாடு டிஸம்பர் உ0, உக, உஉ-உகளில் காசியில் கூடும்.

ஃ ஃ ஃ

இந்தியாவின் கலால் முறையைப்பற்றி விவாதிக்க மந்திரிகளும் கலால் கமிஷனர்களும் கூடிய மகாநாடு ஒன்று சிம்லாவில் நடக்கிறது.

ஃ ஃ ஃ

குருத்வாரபோர்டின் முதல்கூட்டம் பஞ்சாபில் அக்டோபர்மீ உ-உ நடக்கவேண்டுமென்று சர்க்கார் தேதி குறிப்பிட்டிருக்கின்றனர்.

ஃ ஃ ஃ

வங்காளக் குடாக்கடலில் நாட்டுப் படகு ஒன்று புயலில் அகப்பட்டுக் கவிழ, ஆணும் பெண்ணும் குழந்தைகளுமாக கஎ0 பேர் இறந்துபோக, உகூ பேர் தப்பினராம்.

ஃ ஃ ஃ

அகில இந்திய முஸ்லீம் ஹெட்ஜாஸ் மகாநாட்டுக்கு முன்னேற்பாடுகள் நடந்துவருகின்றன. திரு. ஸாம்ச்தாய்பாத்வாலா தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

ஃ ஃ ஃ

அட்டாக் ஜில்லாவில் பெருத்தமழையால் ஆயிரத்துக்கு மேல் வீடுகளும், அரு கிணறுகளும் அழிந்தனவாம். உயிர்ச்சேதமும், பயிர்ச்சேதமும் கூட ஏற்பட்டிருக்கிறதாம்.

ஃ ஃ ஃ

புரொபஸர் ராமமூர்த்தி தமது தேகப்பயிற்சி முறையைக் கற்றுக்கொடுப்பதற்காக பம்பாயில் தேசீய தேகப்பயிற்சி சாலையொன்று திறந்திருக்கிறார்.

ஃ ஃ ஃ

ஒரிஸ்ஸா வெள்ளத்தைப்பற்றிய அறிக்கை யொன்றில் நெற்பயிரின் சேத அளவை அதற்குள் மதிப்பிடமுடியவில்லை யென்று சர்க்கார் கூறுகின்றனர்.

ஃ ஃ ஃ

பஞ்சாப் அரசாங்கத்தார் எஸ். ஜி. பி.ஸி., அகாலிதால் முதலிய சங்கங்கள் சட்ட விரோதமானவை என்று செய்திருந்த உத்திரவை ரத்துசெய்துவிட்டார்கள்.

ஃ ஃ ஃ

ஆகாய விமானியாகிய காப்ஹாம் இந்தியாவந்து சேர்ந்துள்ளார். ஆகாயப் போக்குவரத்து சமீபத்தில் கராச்சிக்கும் கெய்ரோவுக்கும் ஏற்பட்டுவிடும் என்று அவர் கூறுகிறார்.

ஃ ஃ ஃ

டாடாகம்பெனி பங்குதாரில் ஒருவர் அக்கம்பெனியின்மீதும் அதன் அக்கிராசனாதிபதி மீதும், இந்தியக்கம்பெனிகள் சட்டத்தின் எகூ-வது பிரிவின்கீழ், வழக்குத் தொடர்ந்திருக்கிறாராம்.



## தமிழ் நாடு.

நெசவுத் தொழில் விசாரணைக் கமிட்டி சென்னைக்குவந்து விசாரணை நடத்திவருகிறது.

ஃ ஃ ஃ

இச்செப்டம்பர்மீ உகூ-ந் தேதி சென்னைச் சட்டசபை கலைவதென கவர்னர் விளம்பரம் செய்தார்.

ஃ ஃ ஃ

கூடலூர் விருத்தாசலம் ரயில் பாதை வேலை கூடிய சீக்கிரம் ஆரம்பிக்கப்படும் என்று தெரிகிறது.

ஃ ஃ ஃ

புதுக்கோட்டை சமஸ்தான சு-வதுமகாநாடு நவம்பர்மீ கஅ, ககூ-ந் தேதிகளில் புதுக்கோட்டையில் கூடும்; திரு. எஸ். சத்யமூர்த்தி தலைமை வகிப்பார்.

ஃ ஃ ஃ

சென்னை மாகாண முஸ்லீம் லீக்கின் வருஷாந்திரக் கூட்டம் செப்டம்பர்மீ உஉ-ந் தேதி மாலை சென்னையில் மௌலானா யாகூப் ஹாசன் தலைமையின் கீழ் கூடியது.

ஃ ஃ ஃ

திருவனந்தபுரத்தில் மதுவிலக்கு வேலை பலமாக நடந்துவருகிறதாம். வேலைசெய்வோரில் பலர் அபராதம் விதிக்கப்பட்டார்களாம்; இன்னும் பலர் மீது வழக்குத் தொடரப்பட்டிருக்கிறதாம்.

ஃ ஃ ஃ

பெரிய காஞ்சீவரம் புஞ்சுப்பேட்டைத் தெருவில் கணவனுடன் படுக்கையறையிலிருந்த ஒரு சிறுமி கொலையுண்டிருந்தாளாம். கணவனைக் காணோமாம். கணவனைச் சந்தேகிக்கிறவர் டஜன் அடி அடிக்கப்படுவார்கள் என்று கதவில் எழுதியிருந்ததாம்.

——

அலைன்மெண்டால் மாற்றப்பட்டிருக்கிற டிக்ரியை நிறைவேற்றுவதற்கும் ஏல அறிக்கை ஒன்றைத் தீர்க்கவுமான மனுவின் ஸப்ஸ்டிட்யூடட்

## நோட்டீஸ்.

(ஸிவில் புரொஸீஜர் கோடு, ஆர்டர் 21 விதி 16-உம், ஆர்டர் 21, விதி 66-உம்.)

பக்கோவிலுள்ள நௌஸியப்பன் ஸப்டிவிஷனல் கோர்ட்டில்.

1919-ம் வருஷத்திய வியாச்சிய நெ. 2.

1926-ம் வருஷத்திய நிறைவேற்று நெ.26

கருப்பன் செட்டியார்—டிக்ரிபெற்றவரால் அலைன் செய்யப்பெற்றவர்.

Vs.

முத்துக்காப்பன் செட்டியார்—தீர்ப்புப்படி கடன் காரார்.

ராமனுதபுரம் ஜில்லா, தேவகோட்டை, ஆவிலுக்குஸமீபத்திலுள்ள ஷண்முகநாதபுரத்திலுள்ள லேவாதேவி பி. ஆர். எம். முத்துக்காப்பன் செட்டியாருக்கு, 1919-ம் வருஷத்திய வியாச்சிய நெ. 2-இன் டிக்ரி டெய்கு வி.எல். எம். ஆர். எம். ராமன் செட்டியாருக்கு ரெஜிஸ்டர் செய்யப்பட்டதென்று சொல்லி டிக்ரியை அலைன் செய்யப் பெற்றவர் மனுச்செய்து கொண்டிருப்பதால், ஏன் நிறைவேற்ற அனுமதிக்கக் கூடாதென்பதற்குக் காரணம் காட்ட, நீர் நேரிலாவது வக்கீல் மூலமாவது கிரமப்படி அதிகாரமும் கட்டளையும் பெற்ற ஏஜண்ட் மூலமாகவாவது 1926-ம் வருஷம் அக்டோபர் மீ 16-ந் தேதி சனிக்கிழமை இந்தக் கோர்ட் முன்பு ஆஜராகவேண்டுமென்றும், ஏல அறிக்கை நிபந்தனைகளைத் தீர்க்கவும் (அந்தத் தேதி) குறிப்பிடப்பட்டிருக்கிறதென்றும் இதனால் உமக்கு அறிக்கை செய்யப்படுகிறது.

சேவகன் படி ரூ. 0—8—0 வசூலாயிற்று.

(Sd.) ESOOF,
H. C.
ஜட்ஜுக்காக.

## வெளி நாடு.

ருஷ்யாவில் போல்ஷ்விஸத்திற்கு எதிர்ப் பிரசாரம் செய்ததாக உக பேர் தண்டிக்கப் பட்டார்களாம்.

ஃ ஃ ஃ

பிராங்கின் மதிப்பு மறுபடியும் குறையவே, பாயின்கேர் அதன் காரணத்தை விசாரித்து வருகிறாராம்.

ஃ ஃ ஃ

பிரிட்டனில் வேலையில்லாதிருந்தவர்களின் தொகையில் முந்தியவாரம் எ,௯00 குறைந்ததாம்.

ஃ ஃ ஃ

லோகார்னோ மத்தியஸ்தத்தின்படி போலண்டும் ஜுகோஸ்லேவியாவும் நேசபாவ உடன்படிக்கை ஒன்றில் கையெழுத்திட்டனவாம்.

ஃ ஃ ஃ

ஜெர்மனியின் கைத்தொழிற் பொருட்காட்சி யொன்று, இந்தியா உள்பட உலக முழுவதும் சுற்றக், கப்பலில் புறப்பட்டிருக்கிறதாம்.

ஃ ஃ ஃ

இதாலி பெர்டாஸ்டி போகுவில் பரந்த நிலக்கரிச் சுரங்கங்களும் இரும்புச் சுரங்கங்களும் கண்டுபிடிக்கப் பட்டிருக்கின்றனவாம்.

ஃ ஃ ஃ

ரைன்லாண்டைப் பெறவும், சார்வாலியைத் திரும்பப்பெறவும் வேண்டி ஜர்மனி பிரான்ஸுக்கு ரெயில்வேப் பங்குகளில் பெரும்பாகம் தருவதாகச் சொல்லுகிறதாம்.

ஃ ஃ ஃ

டச்சு ராணுவத் துருப்புகள் வருஷாந்திரப் பயிற்சி நடந்த பொழுது அவர்கள் ஒழுங்கீனமாகக் கலவரம் செய்தார்களாம். பின்னர் அமைதி ஏற்பட்டதாம்.

——

அலைன்மெண்டால் மாற்றப்பட்ட டிக்ரியை நிறைவேற்றுவதற்கான மனு ஸப்ஸ்டிட்யூடட்

## நோட்டீஸ்.

(ஸிவில் புரொஸீஜர் கோடு, ஆர்டர் 21, விதி 16.)

ஜில்லா பக்கு.

பக்குவிலுள்ள நௌஸியப்பன் ஸப்டிவிஷனல் கோர்ட்டில்.

1919-ம் வருஷத்திய வியாச்சிய நெ.-2
1926ம் வருஷத்திய நிறைவேற்று நெ.26

கருப்பன் செட்டியார், டிக்ரி பெற்றவரால் அலைன் செய்யப்பட்டவர்.

Vs.

பி. ஆர். எம். முத்துக்கருப்பன் செட்டியார் தீர்ப்புப்படி கடன்காரர்.

ராமனுதபுரம் ஜில்லா, ஆதனக்கோட்டை முத்துப்பட்டணத்திலுள்ள லேவாதேவி என். எஸ். டி. எஸ். நாச்சியப்ப செட்டியாருக்கு,

1919-ம் வருஷத்திய வியாச்சிய நம்பர் 2-இன் டிக்ரி தமக்கு ரிஜிஸ்டர் செய்யப்பட்ட கிரய சாஸன மூலமாக மாற்றப்பட்டதென்று சொல்லி, அலைன் செய்யப்பெற்றவர் அந்த டிக்ரியை நிறைவேற்றவேண்டுமென்று மனுச் செய்துகொண்டிருப்பதால், ஏன் அதை நிறைவேற்ற அனுமதிக்கக் கூடாதென்பதற்குக் காரணம் காட்ட, நீர் நேரிலாவது வக்கீல் மூலமாவது கிரமப்படி அதிகாரமும் கட்டளையும் பெற்ற ஏஜண்ட் மூலமாகவாவது 1926-ம் வருஷம் அக்டோபர்மீ 16-ந் சனிக்கிழமை இந்தக் கோர்ட் முன்பு ஆஜராக வேண்டுமென்று இதனால் உமக்கு அறிக்கை செய்யப்படுகிறது. சேவகன்படி ரூ 0-8-0 வசூலாயிற்று.

(Sd) ESOOF,
H. C.
ஜட்ஜுக்காக.

இனும்! **புதிய ஜவுளி கேட்லாக்.** இனும்!!

நவீன நாகரீகமான புதிய ஜவுளி கேட்லாக் அச்சாகி முடிந்துவிட்டன. விலைகள் ரொம்பவும் குறைந்துவிட்டன. இது சமயம் தவறாமல் உங்கள் விலாசம் தெரிவித்தால் இனமாய் கேட்லாக் அனுப்பப்படும்.

விலாசம்:—M. R. G. பெருமாளய்யர் கம்பெனி, ஜவுளி வியாபாரம், மதுரை. S. I.

---

## தம்பு பிரிண்டிங்கு செட்டு.

அதாவது எழுதவும் படிக்கவும், தெரியாதவர்களிடம், பத்திரம், பாண்டு, ரிகார்ட்டுகளில் (கை) பெருவிரல் முத்திரை வாங்ககூடிய செட்டு 1-க்கு 1—8—0

ரிஜிஸ்ட்டர் ஆபீஸில் உள்ள மாதிரி, கேட்லாக், போஸ்டேஜ் இனும்.

G. ஸ்ரீனிவாசன்
15. அண்ணுபிள்ளை வீதி
மதராஸ்.

---

ஓயாமல் சிரிப்பையுண்டாக்கும் ஒரு விநோதக் கதை.

## முத்து மாமா.

4½ அணு ஸ்டாம்பு அனுப்பினல் ஒன்று கிடைக்கும்,

வாஸன் புஸ்தகசாலை,
97, அண்ணுபிள்ளைத் தெரு,
ஜி. டி. மதராஸ்.

---

## பரப்புக் கற்கள்.

சிமிண்டினல் நானவித வர்ணங்களுடன், சித்திரவேலை செய்த பலதினுசு பரப்புக்கற்கள் எங்களால் தயாரிக்கப்பட்டு வருகின்றன. குணத்திலும், உறுதியிலும், அழகிலும், நிகரற்றவை. இரத்தினக் கம்பளம் விரித்ததுபோல் அலங்காரமாகவிருக்கும். பழகப்பழக அதிக பளபளப்புக் கொடுக்கும். தூசி அடையாது. சரஸமான விலைக்குக் கிடைக்கக் கூடியதாயிருப்பதால் எவரும் வாங்கி உபயோகிக்கலாம். தேவையுள்ளவர்கள் மாதிரிக்கற்களை காரைக்குடி பாத்திரக் கடை சுப்பிரமணிய அய்யரிடம் பார்த்துக்கொள்ளலாம்.

வி. துப்புசாமி அய்யர்,
புரோப்ரைட்டர் லக்ஷ்மிடைல் ஒர்க்ஸ்
(சாந்தநாதபுரம்) புதுக்கோட்டை.

---

## 3-வது வருடம்.

### "கிராம வாழ்க்கை"

கிராமவாசிகளின் முன்னேற்றத்தைக் கருதி உழைத்துவரும் தமிழ் மாதப் பத்திரிகை. இதில் பல அருமையான வியாசங்கள் வெளிவரும். மாதிரி பிரதி இனும்.

வருஷ சந்தா உள்நாடு ரூ. 2-0-0
வெளிநாடு ரூ. 2-8-0

### தமிழ் சட்ட புஸ்தகங்கள்.

(புதிய பதிப்பு)

பெரிய ஹிந்து லா ரூ. 2, புதிய விவகார சிந்தாமணி ரூ. 2-8-0, சிவில் புரோஸீஜர் கோட் ரூ. 3, இந்தியன் பினல் கோட் ரூ. 3, புதிய கிராம பஞ்சாயத்து ஆக்ட் ரூ. 1-2-0, புது கிராம முனிசீப் ஆக்ட். ரூ, 1-8-0, கிரிமினல் புரோஸீஜர் கோட் ரூ. 3, இதர சட்டபுஸ்தகங்களும், நாவல்களும், புராணங்களும், எங்களிடம் கிடைக்கும்.

கிராம வாழ்க்கை ஆபீஸ், மதராஸ்.

---

எதிர்பார்த்திருந்தது வந்துவிட்டது.

2வது பதிப்பு அழகிய படத்துடன்

## மல்லேச்சுரம் போய்கை கோலை.

விலை அணு 12.

ராஜாமணி புக்டிப்போ
17 வது பீட் ... பேட்டை மதராஸ்

---

## 'தஞ்சைமித்திரன்.'

தென்னிந்தியா நிலச்சுவான்தார்களின் நலத்தைக்கோரி வெளிவருவது. விவசாயிகளின் வறுமையைப் போக்குவதற்கு வழிகள் சொல்லி அதிக விளைவு உண்டாக்குவதற்கு நூதன முறையில் சாகுபடி செய்யும் முறை, கிராம நிர்மாணம் முதலியவைகளைப்பற்றி அறிவு பெருக்குவது.

உள்நாடு வருஷ சந்தா ரூ. 3—0—0
வெளிநாடு ,, ,, 4—0—0

மானேஜர்:- 'தஞ்சை மித்திரன்' தஞ்சை.

---

## ஹஸ்த லக்ஷண சாஸ்திரம்.

விளக்கமான அநேக படங்கள் அடங்கிய இச்செந்தமிழ் வசன நூலறிவினல்,

ஞான திருஷ்டி, விவாக லாபம், ஆயுள், குணம், அதிஷ்டம், அறிவு, சந்தானம், வலி, அபாயம், நயை, வியாதி, கண்டம், வஞ்சகம், பக்தி, ஐசுவரியம், சக்தி, சிற்றின்பம், புத்தி, பேரின்பம், வியாச்சியம், காரிய சித்தி, சௌக்கியம் முதலியன அறியலாம்.

**இதன் விலை ரூபா 2-0-0.**

V. S. குமாரசுவாமி முதலியார் & ஸன்,
வேலூர், (North Arcot.)

---

## ஆனந்தபோதினி.

தமிழ் நாட்டில் பழமையும் புதுமையும் வாய்ந்ததும் 20000 சந்தாதாரர்களுடையதுமான மாதப்பத்திரிகை இது ஒன்றே. 12-வது வருடம் இப்பொழுது நடக்கிறது தாங்கள் இதுவரையில் சந்தாதாரராய் இராவிட்டால் இப்பொழுதே சேருங்கள். பிரதி மாதமும் 48 பக்கங்களுள்ள விஷயங்களுடன் வெளிவரும்.

வருடசந்தா இந்தியா, பர்மா, சிலோன் தபாற்செலவு உள்பட ரூ. 1. வெளி நாடுகளுக்கு ரூ. 1—4. மாதிரி காப்பி இனும்.

ஆனந்த போதினி, ஆபீஸ் மதராஸ்.

---

## கவனியுங்கள்.

டிரேட் மார்க்.

நம்முடைய நிசவுசாலையில் தற்கால நாகரீகத்துக்குரியதும், நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் உபயோகிக்கக்கூடியதும் நாணயத்திலும் நிசவு அழுத்தத்திலும் நீடித்து உழைக்கக்கூடியதுமான டைமன் 3-முழம் முதல் 6-முழம் வரையில் சாதா துண்டுகளும்ஜரிகைகுறி துண்டுகளும் பலவிதமான டவல்களும் ஷர்ட்டிங் பீஸ்களும் வெள்ளை 100-நெ. முதல் 200 நெ. வரயில் துப்பட்டாவகையறுக்களும்பலகலர் ஜரிகை சேலைகளும் விலை சரசமாய் கிடைக்கும். வேண்டியவர்கள் அடியில் கண்ட விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

M. ராமநாதன் & பிரதர்ஸ்,
Weaving Factory, நிசவுசாலை
நரசிங்கன் பேட்டை,
S. I. R. Tanjore Dist.

---

## வியாபாரத்திற்கு அழகு விளம்பரமே.

புதிதாய் தருவிக்கப்பட்டது. குறைந்த விலை.

முந்துங்கள்! ஒருமாதம் வரையில்தான் முந்துங்கள்!!

பெரிய கிராமபோன் போலவே பாடக்கூடிய சிறிய அளவில் தயாரிக்கப்பட்ட பிக்மபோன் என்னும் சிருசைஸ் கிராமபோன்.

(இங்கிலாந்தில் செய்யப்பட்டது.)

விசேஷ நாட்களிலும் மற்றும நண்பர்களேயும், உறவினர்களேயும் உற்சாகப் படுத்தக்கூடியது. பற்பல ஆங்கிலேய அகசியங்கள் பாடக்கூடியது. சொற்ப விலைக்கு இதைப்போன்ற நூதனமான கருவியை நீங்கள் பார்த்திருக்கமாட்டீர்கள். உடனே எழுதுங்கள். 5½ இஞ்சு 2 பக்கம் அகசியமுள்ள ஒரு ரிக்கார்டுடனும் ஒரு ஊசி பாக்கட்டுடனும் சப்ளை செய்யப்படும். ரூ. 8. 8. 0. தபால் செலவு ரூபா 1—2—0. தனி ரிக்கார்டு 1-க்கு ரூபாய் 1. வி. பி. சட்டமில்லாத வெளிநாட்டு நேயர்கள் தபால் செலவுக்காக ரூபா 1—8—0 சேர்த்து முன் பணம் அனுப்பவேண்டும்.

English Empire Watch Co., P. B. 1233 Madras.

---

இனும்! **அருமையான புத்தகம்** இனும்!!

ஊழியன் சந்தாதார்கட்குமட்டும் இனும்!!!

இவைகளில் ஐந்து ரூபாய்க்கு குரையாமல் ஆர்டர்செய்பவர்கட்கு, எட்டணு விலையுள்ள "ஸ்ரீ வீரராகவர்" என்னும் (ஹிருத்தாபகாசனி இரகசியம்) புத்தகம் இனும்!!!!

| | ரூ. அ. | | ரூ. அ. |
|---|---|---|---|
| மணவாழ்க்கையின் மர்மங்கள் | 2—4 | ஞானதீபிகை | 1—0 |
| கர்ப்ப சாஸ்திரம் | 1—8 | ஆங்கில ஆசான் | 2—0 |
| மனேவசிய சாஸ்திரம் | 1—8 | ஆங்கிலபோதகன் | 2—0 |
| சரீரமர்ம சாஸ்திரம் | 1—0 | இங்கிலீஷ் உபாத்தியாயர் | 1—8 |
| சதிபதிகளின் மர்மம் | 1—0 | ஆங்கில ஆசிரியன் | 1—0 |
| ரதிமதன சிருங்கார ரகசியம் | 1—0 | ஆனந்த ஆங்கிலபாஷா போதினி | 1—0 |
| ரதி சாஸ்திரம் | 1—4 | தலையணை மந்திரம் | 1—0 |
| கொக்கோகம் | 1—0 | கன்னியாகுமாரி | 1—0 |
| நவமணி (துப்பறியும் நாவல்) | 1—0 | மகாத்மாகாந்தி | 1—0 |
| ஆநந்தமோகன் ,, | 1—8 | குசேலர் | 1—0 |
| சரோஜனி ,, | 2—0 | உறங்கினேன் விழித்தனன் | 0—4 |
| சுந்தரமூர்த்தி | 1—0 | முத்துமாமா | 0—4 |

**ஸ்ரீ வீரராகவ புத்தகசாலை,**
1, கிருஷ்ணப்ப நாயக்கன் அக்கிரஹாரம், சுமதாங்கி சமீபம், சென்னை.

---

## நல்ல தருணம் இதுவே.

120 மூலிகைகளால் முடிக்கப்பெறுவது-அயன் மஹா மூலிகை சந்தனதி தைலம் ஒன்றே—இது சகலவித நோய்களுக்கும் மிக உபயோகமானது—24 அவுன்ஸ் ரூ. 3—0—0 தான். வி. பி. செலவு ரூ. 1—0—0 12 அவுன்ஸ் ரூ. 1—8—0 வி. பி. செலவு ரூ. 0—10—0.

இதனுல் குணமடைந்தவர்கள் எழுதுவது.

தமிழ் சித்தவைத்திய சங்க அமைச்சரே. திருச்சி தருமவைத்தியசாலை மானேஜரே--வைத்தியராஜா வென்று பட்டமும் பரிசும் பெற்றவரே--சர்வரோக சங்கார கர்த்தாவே--தாங்கள் அனுப்பிய தைலத்தால் நாங்களும் பைத்தியம், பீநசம், மயக்கம், வெள்ளெழுத்து, மார்பிளவு, மயிர்கொட்டல், நரைவுமுக்கை பூச்சிவெட்டு, ஒருத்தலைவலி, மண்டையிடி, காது செவிடு, கண்ணீர் வடிதல், கண் சிகப்பு, பார்வை குறைவு, கண் எரிவு, தேக எரிவு, நீர் எரிவு, நீர் சிகப்பு, நீர் மஞ்சள், இருமல், ஞாபக குறைவு, தூக்கமின்மை முதலிய நோய்களிலிருந்து விலகிவிட்டோம் என ஆயிரக்கணக்கான நன்மதிப்பு அனுப்பியதை அன்பர்கள் நேரிலும் காணலாம்.

### சத்தியவேத தங்கரசம்.

ஒன்றே சகலவித ஆபத்து நேசன். விலை புட்டி 1க்கு அணு 8 தான். இதனுல் காலரா, பிளேக், விஷசுரம் சகலவித மலப்போக்கு அஜீரணம், வாய்வு வாதம், இருமல் முதலிய 500 வியாதிகளையும் மிக எளிதில் போக்குகிறது.

வி. பி. செலவு அணு 6 ஆறு புட்டிவரைக்கும்.

விலாசம்.
சத்தியவேத வைத்தியசாலை,
வாகனேரி, திருச்சினுப்பள்ளி.

---

## இனும். இனும்.

அரை அணு ஸ்டாம்புடன் மேல் விலாசம் தெரிவிப்போர்களுக்கு மலையாள மாந்திரீக வைத்திய புஸ்தகம் ஒன்று இனமாக அனுப்பப்படும்.

அமிர்தசஞ்சீவினி வைத்தியசாலை,
கொல்லம்.

---

## காந்தி ஆபரேஷன் படம்.

இது மகாத்மா காந்தி அவர்களுக்கு உண்டான புண்ணைக் கர்னல் மாடக் அவர்கள் லாஸ்ஸன் ஆஸ்பத்திரியில் சிகித்ஸை செய்யும் காக்ஷியாகும்.

விலை அணு இரண்டரை.

வள்ளுவர் நிலயம்,
காரைக்குடி.

---



# சேலம் ஆடோமோபைல்ஸ்

கீழ ராஜவீதி, புதுக்கோட்டை.
புதுக்கோட்டை ஸ்டேட், இராமநாதபுரம் ஜில்லா.

# பியூக்கார் சப்ளையர்கள்.

பியூக் கார் வேண்டுவோர்கள் எமக்காவது எங்கள் காரைக்குடி, ரெப்ரெசென்டேடிவ் (*Representative*) S. V. நாயுடு அவர்களுக்காவது தெரியப்படுத்தினுல் மிகவும் நயமான கார் கிடைக்கும்.

பி. வி. நாமகிரி அய்யர்,
மானேஜிங் புரொப்ரைட்டர்.

---

ஆங்கிலேயம் இலகுவில் கற்றுக்கொள்ள விரும்பும் கனவான்களே நீங்கள்ஏன் கவலைப்படுகிறீர்கள் எங்களால் வெளிவரும் 23000 ஜனங்களால் பிரசித்திபெற்றதுமான

## ஆங்கில ஆசான்

அல்லது ஆங்கில போதினி

தமிழ் எழுத்துக்களை வாசித்தால் இங்கிலீஷ் பதங்கள் சுலபமாய் தெரிந்துகொள்ளலாம்.

இது 7-ம் பதிப்பு. 700 பக்கம் கொண்ட ஓர் பெரிய புத்தகம்.

உபாத்தியாயர் இல்லாமல் சுலபமாய் இங்கிலீஷ் கற்றுக்கொள்ள உதவும் புத்தகம் இதுதான். இது மாதர்களுக்கும், வியாபாரிகளுக்கும், தொழிலாளர்களுக்கும் மிகவும் முக்கியமானது.

முழு காலிகோ பயிண்டு புத்தகம் 1-க்கு விலை ரூ. 2.

தபால் செலவு அணு 6.

பினங்கு, சிங்கப்பூர் தேசங்களிலிருந்து முன் பணம் அனுப்பினல் புஸ்தகம் ரிஜிஸ்டர்செய்து அனுப்பப்படும்.

தி. இராஜகோபால் முதலியார்,
நெ. 302, தங்கசாலை தெரு, மதராஸ்.

---

கையில்கட்டும் அமெரிக்கன் ரோல்டு கோல்டு சங்கிலி இனும்.

திருப்தியில்லாவிடில் பணம் வாபீஸ். எந்த ஷேப்பிலும் வெகு அழகிய சிறு சைஸ்.

(Swiss Made.)

18 காரட் ரோல்டு கோல்டு ரிஸ்லெட் கைக்கெடியாரம்.

இதன் டயல் வெகு அழகாயும் பிரகாசமுமாயிருக்கும். (fancy cut கட்டையல் அல்லது தங்க கலர் டையல்) இதைக் கையிலணிந்தால் கைக்கு ஓர் தங்க ஆபரணம் போலும் தோன்றும். மிக்க உறுதியான சாமான்களால் செய்தது. சரியான மணி காட்டும். நெடு நாள் உழைக்கும். ஒவ்வொரு கெடியாரமும் ஒரு கையிலணியும் இனும் அமெரிக்கன் ரோல்டு கோல்டு சங்கிலியுடன் அனுப்பப்படும். 3 வருஷ உத்திரவாதமுள்ள 18 காரட் ரோல்டு கோல்டு ரிஸ்லெட் வாட்சும் சங்கிலியும் விலை ரூ. 7. 22 காரட் 5 வருஷ காரண்டியுள்ள ரோல்டுகோல்டு ரிஸ்லெட் வாட்சு (stamped on the case as 5 years Rolled Gold) இனும் சங்கிலியுடன் விலை ரூ. 8-6-0. அசல் 9 காரட் பொன் கெடியாரம் இனும் சங்கிலியுடன் விலை ரூ. 20.

வி. பி. சார்ஜ் வேறு. வெளி தேசத்தார் முன் பணம் அனுப்புக.

விலாசம்:—
தி பான்ஸி வாட்சு ஹவுஸ், அண்ணுபிள்ளைத்தெரு, 15-A பீட், மதராஸ்.

---

மருந்துவாழ் மலையின் மகாத்மியம்.

## "அமிர்த சஞ்சீவி"

இது இந்தியாவின் தெற்கே அற்றமான கன்னியாகுமரிக்கு சமீபித்திருக்கும் மருந்துவாழ் மலையிலிருந்து அனேக மூலிகைகளும் பச்சிலை வகைகளும் உயர்ந்ததும் விலை கூடின சாதனங்களை கொண்டு மலையாள வைத்திய நிபுணரால் முறை தவறுதபடி தயார் செய்யப் பெற்றது. இதை உபயோகித்த ஒரு மணி நேரத்திற்குள்ளாகவே எவ்வளவு பல ஹீனனுயிருந்தாலும் கிழவனுகயிருந்தாலும் நூதன யௌவனத்தையும் உற்சாகத்தையும் அடையும்படி செய்யும். சகல வியாதிகளும் தீர்த்து ரத்தவிருத்தி, ஜீரணசக்தி, தாதுபுஷ்டி முதலியவைகளை உண்டு பண்ணும். பாலகன் முதல் விருத்தாள் வரை ஆண் பெண் இருபாலர்க்கும் உபயோகிக்கலாம்.

20 நாள் மருந்து ரூ. **3.** 40 நாள் மருந்து ரூ. **5.**

தபாற் செலவு வேறு.

**M. R. Vaidiasala M. RAMASWAMI Co., Kottar, S. Travancore.**

---

## கையில் கட்டும் அமெரிக்கன் ரோல்டு கோல்டு சங்கிலி இனும்.

(திருப்தியில்லாவிடில் பணம் வாபீஸ்) (சிறு சைஸ்.)

18 காரட் ரோல்டு கோல்டு தங்க கலர் டைல் அமைத்த ஸ்விஸ்மேட் ரிஸ்லெட் கெடியாரம். பார்வைக்கு அசல் பொன் கெடியாரம் போல் தோன்றும் உறுதியான சாமான்களால் செய்யப்பட்டது. சரியான மணிக்காட்டும். எம்மாதிரி ஷேப் ஆனபோதிலும் சப்ளை.செய்யப்படும். இதை ஆண் பெண் இருபாலரும் கையில் அணிந்தால் ஒரு தங்க ஆபரணம்போல் தோன்றும்.

| | |
|---|---|
| (நெ. 84) 18 காரட் 4 வருஷம் உத்திரவாதமுள்ள ரிஸ்டுவாட்சு | ரூ. 6 8 0 |
| (நெ. 85) 22 காரட் 10 வருஷ காரண்டியுள்ள ரோல்டு கோல்டு வாட்சு | ரூ. 8 0 0 |
| (நெ. 86) 22 கார்ட் நெடுநாள் உழைக்கக்கூடிய உயர்ந்த வேலைப்பாடுள்ள பிரிட்ஜ் மூவ்மெண்டு வாட்சு | ரூ. 9 8 0 |

THE ENGLISH EMPIRE WATCH & Co,
Post Box No. 1233. Madras.

---

# தேவை! வேலைக்காரர்கள் தேவை!!

நமது காரியாலயத்தில் அச்சுக்கோர்ப்போர், மிஷின் போடுவோர் முதலிய வேலைக்காரர்கள் தேவையிருப்பதால், பிரியமுள்ளவர்கள் நற்சாக்ஷிப்பத்திரங்களுடன் நேரிலும், கடிதமூலமாயும் புரட்டாசிமீ கஉஉ க்குள் விண்ணப்பித்துக்கொள்ள வேண்டும். தகுதிக்குத்தக்கவாறு சம்பளம் கொடுக்கப்படும்.

காரியஸ்தர்
"ஊழியன்" காரியாலயம்,
காரைக்குடி.

## ஏ ஜ ண் டு க ள் தேவை.

ஊழியனுக்குச் சந்தா சேர்க்கவும் விளம்பரங்கள் சேர்க்கவும் ஏஜண்டுகள் ஆங்காங்கு தேவை தக்க கமிஷன் கொடுக்கப்படும். மற்ற விபரங்கட்குக் காரியஸ்தருக்கு எழுதித் தெரிந்துகொள்ளவும்.

காரியஸ்தர், "ஊழியன்"
காரைக்குடி.

ராய. சொக்கலிங்கனால் காரைக்குடி ஊழியன் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

